# காயத்ரி சாதனை ஏன்? எப்படி?



பண்டிட் ஸ்ரீராம் சர்மா ஆசார்யா

# காயத்ரி சாதனை ஏன்? எப்படி?

பண்டிட் ஸ்ரீராம் சர்மா ஆசார்யா
காயத்ரி தீர்த்தம்
சாந்திகுஞ்ச், ஹரித்வார்

தமிழாக்கம் :
**G.V. நடராஜன்**
சென்னை

வெளியிடுவோர் :
**சாந்திகுஞ்ச் ஹரித்வார்**
உத்தராஞ்சல் - 249411

****

ஸ்ரீ காயத்ரி மந்திரம்

ஓம் பூர் புவஹ ஸ்வஹ தத்ஸவிதுர்வரேணியம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ நஹ பிரசோதயாத்.

# Gayatri Sadhana Why and How?

Second Edition : 2005

**Publisher :**
YUG NIRMAN YOJANA,
GAYATRI TAPOBHUMI,
MATHURA - 3 (U.P.)
Phone : (0565) 2530128, 2530399

Price : Rs. 6.00

*வெளியிடுவோர் :*
சாந்திகுஞ்ச் ஹரித்வார்,
உத்திராஞ்சல் – 249411
போன்: (01334) 260602, 260403, 261328
**Fax : (01334) 260866, Email :shantikunj@awgp.org**
**web : www.awgp.org www.dsvv.org**
**Chennai- 044- 55431322, 26454109, 044 30976764**
**Madurai- 0452- 5372349, 0452 3951454**
Email: chennai.tn.in@awgp.org madurai.tn.in@awgp.org

# காயத்ரீ சாதனை - ஏன்? எப்படி?

ஆதிசக்தி (முதன்மையான சக்தி), வேதமாதா (வேதத்தின் தாய்), தேவமாதா (தெய்வத்தாய்), விஸ்வமாதா (உலகத்தாய்) ரூபங்களில் காயத்ரீ தேவியின் அறிமுகம்.

காயத்ரி இறைவனின் விருப்பங்களின் சக்தியாகும். கடவுளின் விருப்பத்தின் காரணமாக இந்த உலகம் இயங்குகிறது. சிறு அணுவிலிருந்து பிரம்மாண்டம் வரையிலும் ஆறுகள், மலைகள் முதலாக பூமி, சந்திரன், சூரியன் வரை எல்லாமே அதன் தாக்கத்தால்தான் அசையும் இயல்பைப் பெற்றுள்ளன. மரம், செடி கொடிகளிலும் இதன் சக்தியால்தான் உயிர் அலைகள் எழும்புகின்றன. மற்றுமுள்ள உயிர்களிலும் அவற்றின் செயல்களைத் தாமே எளிமையாகச் செய்து கொள்ளும் அளவுக்குக் காயத்ரி அம்சம் நிறைந்துள்ளது. பொதுவாக மனிதனில் இந்தச் சக்தி அறிவு என்னும் பெயரில் இருக்கிறது. மனிதன் தன்னுடைய வாழ்க்கையை நிர்வகிக்கவும், சுகசௌகரியங்களை விரிவாக்கவும் மூளையின் உதவியைத்தான் நாடுகிறான். சில சமயங்களில் இது ''ருதம்பரா ப்ரக்ஞா'' பெயரில் நல்லறிவாக வெளிப்படுகிறது. எது சரி? எது தவறு? என்பதை உணர்ந்து வாழ்க்கையின் குறிக்கோளை நோக்கி முன்னேறச் செய்கிறது. சாதாரணமாக இது மனித மூளையின் ஆழத்தில் தூங்கிக் கொண்டிருக்கும். இதை விழித்தெழச் செய்யும் வழியைத்தான் சாதனை என்று கூறுகிறோம். இதைத் தட்டியெழுப்பினால் மனிதனுக்குக் கடவுள் சக்திகளுடன் ஒரு தொடர்பு ஏற்படும்.

இறைவன் மூல ரூபத்தில் அருவன் ஆவான். நடுநிலை வகித்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு அமைதியாக இருப்பான். படைப்பின் ஆரம்பத்தில் ஒன்றிலிருந்து பலவாக மாறவேண்டும் என்னும் விருப்பம் தோன்றியபோது இந்த விருப்பம் ஒரு சக்தியாக மாறிற்று. இதன் விளைவாக முழு உலகமும் ஏற்பட்டது. இந்த உலகைப் படைத்த முதன்மையான சக்தியானதால் ''ஆதி சக்தி'' என்று அழைக்கப்பட்டது. உலகம் முழுவதும் உள்ளும் வெளியும் உள்ள சமத்துவத்திற்கும் சீரான ஏற்பாடுகளுக்கும் காரணமாக எவை காணப்படுகின்றனவோ அவை காயத்ரி தேவியின் செய்கையாகும். இதன் தூண்டுதலினால் இந்த பிரம்மாண்டத்தின் எல்லா அசைவுகளும் ஏதோவொரு முக்கியமான குறிக்கோளை நோக்கித் தன் மகா யாத்திரையில் முன்னேறிக் கொண்டிருக்கிறது.

இந்த சிருஷ்டியை ஏற்படுத்தும்போது தேவைப்பட்ட அறிவும், வேலைப்பாட்டுத் திறமை படைப்புக் கடவுள் பிரம்மாவிற்குக் காயத்திரியைக் குறித்துச் செய்த தவத்தாலும், சாதனையாலும் தான் கிடைத்தன. இதுதான் அறிவு, அறிவியல், வேதமெனக் கூறப்பட்டது. இவ்வுருவில் ஆதிசக்தியானவள் ''வேதமாதா'' என்று அழைக்கப்பட்டாள். இதற்குப் பொருள் வேதத்தின் தாய், வேத்தின் சாரமெல்லாம் காயத்ரி மந்திரத்தில் உள்ளடங்கியிருக்கிறது என்பதாகும்.

இந்த சிருஷ்டியின் நியமங்களைச் சரிவரச் செயல் படுத்தி, முறைப்படி நடத்தும் வெவ்வேறு தெய்வீக சக்திகள் ஆதிசக்தியின் கிளைகள்தான். எப்படி ஒரே மின்சார சக்தி டியூப்லைட், ஹீட்டர், ரெப்ரிஜெரேட்டர், கூலர் ஆகிய வெவ் வேறு சாதனங்களுக்குப் பயன்பட்டுத் தன் வேலைப்பாடு களைக் காணச் செய்கிறதோ, அதுபோலவே ஆதிசக்தியான ஒருவளே நிர்ணயித்தல், செயல்படுத்தல், மாறுதல்கள் ஆகிய

செயல்களுக்குத் தக்கவாறு படைப்புக் கடவுள் பிரம்மா, காக்கும் கடவுள் விஷ்ணு, மாறுதல் ஏற்படுத்தும் சக்தி பெற்ற சிவன் என்று தெய்வ சக்திகளின் உருவில் வெவ்வேறாகக் காணப்படுகிறாள். இதைப் போன்று மற்றுமுள்ள வெவ்வேறு தெய்வீக சக்திகளும் காயத்ரியின் பிரிவுகளேயாகும். அச் சக்திகள் காயத்ரியில் இருந்துதான் தங்கள் போஷாக்கைப் பெறுகின்றன. இதன் காரணமாகத் "தேவமாதா" என்று அழைக்கப்படுகிறாள். இந்தத் தேவ மாதாவின் அருளைப் பெறும், சாதாரண மனிதனும் தெய்வத் திற்குச் சமமான குணங்களையும், திறமைகளையும் பெற்று விடுவான்.

முழு உலகமும் ஆதிசக்தியிலிருந்து ஏற்பட்டதால் அவள் உலகத்தாய் "விஸ்வமாதா" என்ற பெயரையும் பெற்றிருக் கிறாள். இவ்வருவில் உள்ள தாயின் அருளைப் பெறும் மனிதன் "விஷ்வ மானவ்" ஆவான். "வசுதைவ குடும்பகம்" என்னும் கருத்தின்படி உலக மக்கள் எல்லோரையும் தன் குடும்பமாக எண்ணும் பரந்த நோக்குடன் வாழத் தொடங்குவான்.

**காயத்ரி சக்தி என்பது என்ன?**

உயிரினங்களைப் பாபங்களிலிருந்து கடைத்தேற்றும் திறமையைப் பெற்றுள்ளதால் ஆதிசக்தி காயத்ரி என்று கூறப் படுகிறாள். ஐத்ரேய பிராம்ஹண கிரந்தத்தில் "க்யான் த்ராயதே ஸா காயத்ரி" என்று கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் உயிரைக் காப்பாற்றுவது காயத்ரி.

"கீயதே தத்வமனயா காயத்ரீ" என்று சங்கர பகவத் பாதாள் தம் பாஷ்யத்தில் காயத்ரியின் திறமையைப் பற்றிக் கூறியிருக்கிறார். விவேகத்துடன் கூடிய அறிவு ருதும்பராவின் திறமையினால் உண்மையைப் பற்றிய ஞானத்தைப் பெறு கின்றதோ அதுதான் காயத்ரீ என்பதன் பொருளாகும்.

எது உண்மை, எது பொய், எது சரியானது அல்லது தவறானது. எதைச் செய்ய வேண்டும். எதைச் செய்யக்கூடாது என்பன போன்றவற்றை நிர்ணயிக்கும் சிறந்த அறிவு மிகவும் அற்புதமானது. மனிதனுக்கு நன்மை பயக்கும் சக்திகளுள் வேறு எதுவும் இதற்கு ஈடாகாது.

உலக அறிவானது எவ்வளவு திறமை வாய்ந்ததாக இருந தாலும், கூர்மையானதாக இருந்தாலும், வளம் பெற்றதாகவும், பொருளீட்டுவதற்கு ஏற்றதாக இருந்தபோதிலும் அதனால் உண்மையான நன்மை ஏற்படாது. அந்தராத்மாவிற்குச் சுகமும், அமைதியும் கிட்டாது. பணம் படைத்தால் வளமான வாழ்க் கைக்குத் தேவையான பொருட்களைச் சேகரிக்கலாம். இதனால் வேதனை, துக்கம், கர்வம் முதலியன அதிகரிக்கும். இவற்றின் சுமை வாழ்க்கையை மிகவும் தொல்லைகள் நிறைந்ததாகச் செய்துவிடும். அது வெளிப் போக்கான படாடோபங்களைச் சிறிதளவு காட்டிவிட்டு மன அமைதியை அழித்துவிடுகிறது. இதன் விளைவாகச் சிறிய சிறிய உடல் நோய்களும், மனநோய் களும் ஏற்படுகின்றன. இவை மனிதனை ஒவ்வொரு நொடியும் துன்புறுத்திக் கொண்டே இருக்கும். அமைதியைக் குலைத்து விடும். இதைப் போன்ற அறிவு எவ்வளவு கூர்மையானதோ அதே அளவு துன்பத்திற்கும் காரணமாக இருக்கும். இதைப் போன்ற அறிவைவிட அறிவின்மையே மேலானது.

நற்குணங்கள் நன்மையையே தோற்றுவிக்கும். தத்துவங் களுடன் நிறைந்திருக்கும் அறிவுக்குத்தான் 'காயத்ரி' என்று பெயர். இதன் தூண்டுதலினால் மனிதனின் உடலும் அறிவும் ஒவ்வோர் அடியிலும் நன்மையும் வெற்றியும் நிறைந்த பாதை யில் நடத்திச் செல்லும். ஒவ்வொரு கணமும் ஆனந்தானுபவம் ஏற்படும். மனிதனின் ஒவ்வொரு செயலிலும் அவனை அதிக வலுவுடையவனாகவும், சக்தி நிரம்பியவ னாகவும், நாளுக்கு

நாள் குணவானாகவும், திறமை வாய்ந்தவ னாகவும் ஆக்குகிறது.

இதற்கு நேர்மாறாக, துர்புத்தியினால் ஏற்படுகின்ற எண்ணங்களும், செய்யும் செயல்களும் மனிதனின் பிராண சக்தியை ஒவ்வொரு நாளும் குறைத்துக் கொண்டே போகும். கெட்ட எண்ணங்களாலும், தீய பழக்கங்களாலும் நாளுக்கு நாள் உடல் நலிந்துவிடும். தன்னலம் நிரம்பிய எண்ணங்களால் மனம் 'பாபம்' என்னும் சேற்றில் சிக்கிக்கொண்டே போகும். வாழ்க்கை என்னும் பாத்திரத்தில் எத்தனை ஓட்டைகள் இருக்கின்றனவோ அவற்றின் வழியாக இதுநாள் வரை திரட்டிய சக்திகள் எல்லாம் வெளியேறிவிடும். எவ்வளவுதான் அறிவைப் பயன்படுத்தி னாலும், புதிதாகச் சம்பாதித்தாலும் தன்னலம், பயம், கருமித் தனத்தின் காரணமாக மனது எப்போதும் துயரத்தில் ஆழ்ந்திருக்கும். மனதில் தோன்றும் சக்திகள் குறைந்து கொண்டே போகும்.

இப்படி அறிவின்மையால், இந்த விலைமதிப்பற்ற வாழ்க்கையை வீணாக்கிக் கொண்டு அறிவின்மை என்னும் இருட்டில் தள்ளாடும் மனிதர்களுக்குக் காயத்ரி ஒரு பிரகாச மான சுடரொளி. உண்மையான ஊன்றுகோல். நம்பிக்கை களுடன் நிரம்பியதொரு வாசகம். இது மனிதனின் நற்குணங் களை விழிப்படையச் செய்து, பாபச் சேற்றிலிருந்து விடுவித்து உயிரைக் காப்பாற்றி வாழ்வில் அமைதியையும், மகிழ்ச்சி யையும் சேர்க்கும்.

காயத்ரி ஒரு தேவியோ, தேவனோ அல்லது ஒரு கற்பனைச் சக்தியோ அல்ல. பரம்பொருளின் விருப்பம் என்னும் சக்திதான் மனத்தில் நற்குணங்களாகப் பரிணமித்து அவனுடைய வாழ்க்கையைப் பயனுடையதாகவும், பொருளு டைய தாகவும் செய்கிறது. வாழ்க்கையின் இரகசியத்தைப்

பற்றியும், சிருஷ்டியைப் பற்றியும் ஆராய்ந்து சாதனை செய்த முனிவர்கள், ஆழ்ந்த தியானத்தில் இருக்கும்போது இவற்றில் சில செயலாற்றும் சக்திகள் மூலகாரணமாக இருக் கின்றன என்று உணர்ந்தார்கள். ஆதி சக்தியை 24 எழுத்துக் களுடன் கூடிய மந்திர ரூபத்தில் கண்டார்கள். உயிரைக் காக்கும் திறமை வாய்ந்ததால் காயத்ரி என்று அழைக்கப்படுகிறது. இதைத் தோற்றுவித்த பெருமை விஸ்வாமித்திரரையே சாரும்.

**காயத்ரி மந்திரத்தை உச்சரிப்பதால் திவ்ய சக்திகளின் விழிப்புணர்ச்சி :**

காயத்ரி மந்திரத்தின் சிறப்புக்கு உலக ரீதியான காரணம், அதன் எழுத்துக்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்திருக்கும் முறை தான். இது ஒலியியலின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. இதை உச்சரிப்பதினாலேயே சூட்சும சரீரத்தில் மறைந்திருக்கும் பல சக்திமையங்கள் தானாகவே விழிப்படைகின்றன. திவ்ய திருஷ்டி படைத்த முனிவர்களின் கருத்தின்படி உடலில் பல சக்கிரங்கள், உப சக்கிரங்கள், முடிச்சுகள், பைகள், மாத்ரு கைகள், உபத்தியைகள், மெலிந்த நாடிகள் ஆகியவை நிரம்பி யிருக்கின்றன. இவை விழித்தெழுந்தால் மனிதன் பல நற் குணங்களுக்கும், சக்திகளுக்கும் எஜமானனாகி விடுவான்.

காயத்ரி மந்திரத்தின் 24 எழுத்துக்களின் உச்சரிப்பால் வாய், உதடு, கழுத்து, வாயின் மேல்பாகம், தலை ஆகிய வற்றின் மேல் ஏற்படும் அழுத்தத்தினால் அந்த மையங்கள் வீணையின் நாதம் போல் ஒலித்தெழுகின்றன. உள்ளிருந்து ஒரு இனிய இசை ஒலி எழும்பி உள்ளிருக்கும் ஒரு மேன்மையான முடிச்சுகள் வெளிப்பட்டு தத்தம் சக்திகளை வெளிப்படுத்து கின்றன. இப்படி சாதகன் ஒரு அலை சக்தியால் உலகில் பரவியிருக்கும் காயத்ரி சக்தியையும், அதன் கிளை சக்தி களையும் ஈர்த்துத் தன்னுள் நிரப்பிக் கொள்கிறான். காயத்ரி

சக்தியின் அலைகள் வானொலி மற்றும் தொலைக்காட்சி ஒலி, ஒளி அலைகளைப் போல் ஆகாயத்தில் பரவியிருக்கின்றன. காயத்ரி மந்திர உச்சாரணையால் ஏற்படும் ஒலி அலைகள் சாதகனின் மனதை அந்த நிலைக்குச் சுண்டிவிடுகிறது. அதாவது மனதுடன் தொடர்பு கொள்கிறது. யோகிகள் கடின தவத்தாலும் சாதனைகளாலும் நீண்ட காலத்தில் எதைப் பூர்த்தி செய்து கொள்கிறார்களோ, அதே வேலையை காயத்ரி ஜபத்தினால் குருகிய கால அளவிலேயே சுலபமாகப் பூர்த்தி செய்து கொள்ளலாம்.

காயத்ரி மந்திரத்தின் சொல் வலிமையுடன், சாதனையால் புனிதமடைந்த சாதகனின் நேர்மையான கொள்கைகளும் உயர்ந்த எண்ணங்களும் சேர்ந்து கொண்டால் காயத்ரியின் சக்தியை மிகவும் வலிவுடையதாகச் செய்துவிடுகிறது. சாதகனின் பற்றுதலும், நம்பிக்கையும் காயத்ரி மந்திரத்தை மேலும் சக்திவாய்ந்ததாக ஆக்குகிறது. நம்பிக்கை எத்தனை வலிவுடையது என்பதை எல்லோரும் அறிவார்கள். தூணைப் பூதமாகவும், கயிற்றைப் பாம்பாகவும், கல்லைக் கடவுளாகவும் ஒருவனை எண்ணும்படிச் செய்யும் திறமை நம்பிக்கையில் உள்ளது. துளசிதாஸர் பற்றுதலையும் நம்பிக்கையையும் பார்வதியுடனும், பரமசிவனுடனும் ஒபபிட்டிருக்கிறார்.

காயத்ரி சாதகன் சிரத்தையுடனும் நம்பிக்கையுடனும் சாதனை செய்தால், சொல்வலிமையுடன் நேர்மையான எண்ணங்களும் சேர்ந்து காயத்ரி சாதனையின் தாக்கம் மேலும் வளர்ந்துவிடும். இது ஒரு அற்புதமான சக்தியாகத் திகழும்.

காயத்ரி மூன்று குணங்கள் பொருந்திய சக்தியாகும். ஹ்ரீம் - நல்லறிவு, ஸ்ரீம் - செழுமை, க்லீம் - வலிமையை முதன்மையாகக்கொண்ட தன்மை ஆகிய இம்மூன்றும் இதன்

சிறப்புகள். இதை கங்கை, யமுனை மற்றும் ஸரஸ்வதியின் (திரிவேணி) சங்கமம் என்றும் கூறலாம். தெய்வ சக்திகள் இணைந்திருப்பதால் சரஸ்வதி, லக்ஷ்மி, காளி என்றோ அல்லது, பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரன் என்றோ கருதலாம். வேதமாதா, தேவமாதா, விஸ்வமாதா என்னும் மூன்று ரூபங்கள், காயத்ரி சாதகன் தன் சாதனையால் மனத்தையும், அறிவையும், எண்ணத்தையும் இந்தத் திரிவேணியில் நீராடச் செய்யும் வாய்ப்பு ஏற்பட்டால் அவன் நிலை காயகல்பம் (என்றும் பதினாறு) தான்.

**நற்குணத்தை மேம்படுத்தும் உள்மன மாறுதல்கள் :**

காயத்ரி சாதனையினால் மனிதனில் ஏற்படும் மாறுதல் களின் முதல் தாக்கம் அவனுடைய உள் மனதில் ஏற்படுகிறது. அந்தத் தாக்கம் அவனுடைய எண்ணங்களையும், மனதையும், பாவனைகளையும் சரியான பாதையில் செல்ல ஊக்குவிக்கும். மனிதனிடம் நல்ல குணங்கள் வளரத் தொடங்குகின்றன. இதனால் சாதகனிடம் உள்ள குறைகளும், தீய எண்ணங்களும் குறைகின்றன. இவ்வாறாகச் சாதகனிடம் பல குண விசேடங்கள் முளைத்தெழுகின்றன. இவை, வாழ்க்கையைச் சரளமாகவும், அமைதியாகவும், வெற்றிகரமாகவும் அமைத்துக்கொள்ள உதவுகின்றன.

நற்குணங்களின் வளர்ச்சியால் உடலின் செயல்களிலும், விதிமுறைகளிலும் மிகுந்த மாறுதல்கள் ஏற்படுகின்றன. இந்திரியங்களின் உளைச்சல் குறைந்துவிடும். நாவின் ருசிபார்க்கும் தன்மையும், உணவு உண்ணுவதில் உள்ள தீய பழக்கங்களும் திருந்த ஆரம்பிக்கும். காமேந்திரியங்களின் உத்வேகம் கட்டுக்குள் வரத் தொடங்கும். தீய வழிகளிலும், விபசாரத்திலும், மற்ற இச்சைகளிலும் மன ஈடுபாடு குறையும். பிரம்மசரியத்தில் சிரத்தை வளர்கிறது. இதனால் வீரியம் காப்

பாற்றப்படுகிறது. இந்திரியங்களில் காமேந்திரியங்களும், சுவைக்கும் இந்திரியங்களும் முக்கியமானவை. அவற்றைக் கட்டுப்படுத்தினால் உடல் நலமும், நோய்களில் இருந்து விடுதலையும் தானாகவே உண்டாகும். அன்றாட வேலைகள் சுத்தமாகவும், நியமப்படியும் அமைந்து உழைப்பின் பலன் முறைப்படி இணைந்துவிடும். இதனால் முன்னேற்றத்தின் பாதையும், வெற்றியின் பாதையும் தெளிவாகக் காணப்படும்.

மனதில் நல்ல குணங்களின் விருத்தியால் சோம்பல், தைரியமின்மை, கெட்ட பழக்கங்கள், கோபம், பயம், துக்கம் போன்றவை குறையும். கட்டுப்பாடு, உற்சாகம், வீரம், தைரியம், எளிமை, மகிழ்ச்சி, நல்ல வழக்கங்கள் போன்றவை அதிகரிக்கும்.

உள்மனதில் ஏற்படும் மாறுதல்களின் காரணமாக அறியாமையால் விளையும் பிரமை, தவறாகப் புரிந்து கொள்ளும் தன்மை ஆகியவை விலகி அன்றாட வாழ்க்கையில் தோன்றும் கவலைகளுக்கு விடைகள் சகஜமாகவே கிடைக்கும். கட்டுப்பாடு, தொண்டு, எளிமையான தன்மை, தாராள குணம், தானம், நேர்மை போன்ற குணங்களால் மற்றவர்களுக்கும் நன்மை விளையும். தீங்கு ஏற்படும் என்ற பயம் நீங்கும். ஆதலால் சாதாரணமாக எல்லாரும் நன்றி உடையவர்க ளாகவும், ரசிகர்களாகவும், உதவி செய்பவர்களாகவும், காப் பாற்றுபவர்களாகவும் மலர்கிறார்கள். நம்மிடையே ஏற்படும் மேன்மையான பாவனையாலும், நன்றி உணர்ச்சியாலும் ஆத்மாவுக்குத் திருப்தி செய்யும் அன்பு, சந்தோஷம் என்னும் ஊற்றுகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகும். வாழ்க்கையும் இன்ப மயமாக மாறிக் கொண்டே போகும். இதைத் தவிர இக்குணங்கள் இயல்பாகவே மிக இனிமை யானவை. இவை யாருடைய மனதில் நிறைந்திருக்

கின்றனவோ அவர்களிடம் ஆத்ம சந்தோஷம் என்னும் குளிர்ந்த நீரோடை ஓடிக்கொண்டிருக்கும். இதற்குப் பொருள் காயத்ரி மந்திர சாதனை மனிதனின் உள் மனத்தில் ஆழமான மாற்றங்களை உண்டாக்கி இன்பத்திற்கும் அமைதிக்கும் வழியைத் திறந்து விடுகிறது.

## செழுமையையும் வெற்றியையும் தரும் காயத்ரி

நற்குணங்களின் வளர்ச்சி மன அமைதி, மகிழ்ச்சி ஆகிய வற்றைத் தருவதுடன் எல்லா மக்களுக்கும் செழுமையையும், வெற்றியையும் கொடுக்க வழிகோலுகிறது. உடல் தூய்மை, மனத்தூய்மையுடன் புற வாழ்க்கையிலும் கூட பல விதமான நன்மைகளை நாம் பெற வழிசெய்கிறது. சிந்திப்பதாலும், புரிந்து கொள்வதாலும் மலைபோல் தோன்றிய துன்பங்கள் இப்போது துரும்புபோல லேசாகத் தோன்றத் துவங்கும். வாழ்க் கையில் துக்கமும், போராட்டங்களும் குறையும். ஏனென்றால், மனிதனின் விருப்பப்படி சூழ்நிலை மாறும். அல்லது சூழ் நிலைக்கு ஏற்றவாறு அவன் தன்னுடைய விருப்பங்களை மாற்றிக் கொள்வான்.

இச்சைகளுக்கும் சூழ்நிலை களுக்கும் இடையே ஏற்படும் மோதல்கள்தான் துக்கத்திற்குக் காரணம். அறிவு உள்ளவன் இரண்டிற்குள் ஏதோ ஒன்றைப் பின்பற்றி மோதலைச் சமாளிப்பான். தேவையில்லாத துன்பத்திலிருந்து தப்பித்துக்கொள்வான். இவ்வாறாக வாழ்க்கைப் பாதை சீரான தாகவும், எளிமையானதாகவும் இருக்கும்.

உண்மையில் துன்பமும், இன்பமும் வெளிப் பொருள்களால் ஏற்படுவன அல்ல. இவை மனிதனின் மன நிலையின் மேல் ஆதாரப்பட்டுள்ளன. எந்த மனமானது அரசர்களுக்கேற்ற உணவாலும், பட்டு மெத்தைகளாலும்

திருப்தி அடையவில்லையோ, அதே மனமானது ஒரு மகானின் உபதேசத்தால் தியாயகத்தையும், சன்னியாசத்தையும், மேற் கொண்டு காட்டின் கட்டாந்தரையைச் சுகமான படுக்கை யாகவும், காட்டில் கிடைக்கும் கிழங்குகளையும், பழங் களையும் எல்லாவற்றையும் விட உயர்ந்த உணவாகக் கருதும். இந்த மாறுபட்ட மனோபாவம் எண்ணங்களின் மாற்றத்தால் ஏற்பட்ட விளைவாகும்.

உண்மையில் காயத்ரி மூன்று குணங்கள் உடைய சக்தியாகும். இதன் சாதனையால் ஸத்வகுணம் வளர்வதுடன் ரஜோகுணத்தின் தேவையான பகுதியும் விரிவாகிறது. இதனால் மனிதனிடம் மறைந்திருக்கும் சக்திகள் விழித்தெழுகின்றன. இதன் காரணமாக உலக வாழ்க்கைப் போராட்டத்தில் விரும்பத் தக்க விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. ஆசை, உற்சாகம், தீவிர மான அறிவு, காலத்திற்கு ஏற்றபடி நடந்து கொள்ளும் திறமை, பேச்சில் இனிமை, மனிதத்தன்மையின் ஈர்ப்பு போன்ற குணங்கள் மலர்கின்றன. காயத்ரி உபாஸகர்கள் உள்ளுக்குள்ளேயே அச்சில் போடப்பட்டு வருவதால், அவர்களுக் குள்ளே எதிர் பாராத மாற்றங்கள் ஏற்படுவதால் சாதாரண மனிதன்கூடக் கிரமமாகச் செழுமை, வெற்றி, உயர்வு ஆகியவற்றை நோக்கி முன்னேறுவான். காயத்ரி சாதனை தங்க நாணயங்களை அள்ளித் தராவிட்டாலும், இல்லாமை என்னும் மனநிலை, ஏழ்மை ஆகிய வற்றில் உழலாமல் இருக்கச் செய்யும் என்பது உண்மை.

**சங்கடங்களைத் தீர்க்கும் காயத்ரி**

முன்வினைப் பயன் அல்லது கஷ்டம் நிறைந்த நிலைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் வரும். இதனுடைய அழுத்தம் மிக அதிகமாகவும் சண்டமாருதம் போலவும் இருக்கும். இதன் பிடியில் சிக்கிக் கொள்பவனுக்குத் துன்பங்கள் அதிகரித்துக் கொண்டே போகும். நோய், சண்டை, பண

விரயம், படையெடுப்பு, அடிதடி, பிரிவு, சோகம் ஆகிய புயல் வீசும்போது அதைத் தடுக்க வழி இருக்காது. துன்பம் தனித்து வருவதில்லை. வரும்போது தன் குழந்தை குட்டிகளுடன், பரிவாரத்துடன் வரும் என்பது பழமொழி. நான்கு பக்கங் களிலும் கஷ்டங்களால் சூழப்பட்ட மனிதன், சக்ரவியூகத்தில் சிக்கிக் கொண்டவனின் நிலையைப் போன்ற அனுபவம் பெறுவான்.

இதைப் போன்ற நெருக்கடியான சமயத்தில் சாதாரண மக்கள் மரணத்தைத் தழுவுவது போன்ற கஷ்டத்தை அனுபவிப் பார்கள். பயம், சிந்தனை, கலக்கம் ஆகியவற்றால் கைகால்கள் உணர்வற்றுப் போகும். அழுவதும், கத்துவதுமாக இருப் பார்கள். வெகுகாலம் அதிகமான கஷ்டத்தை அனுபவிப் பார்கள். ஆனால் காயத்ரி உபாசகன் தன் அறிவுக் கூர்மை யாலும், தைரியம், சாகசம், கடவுள் நம்பிக்கை ஆகியவற் றாலும் இவற்றைச் சுலபமாகக் கடந்துவிடுவான். உண்மையில் துன்பம் என்னும் நதியைக் கடக்க தைரியம், சாகசம், புத்தி கூர்மை, முயற்சி என்னும் நான்குமுனை ஓடம் தேவைப் படுகிறது. காயத்ரி மந்திரம் இந்த நான்கு விஷயங்களையும் மனிதனில் வளரச் செய்கிறது. இதனால் கஷ்டமான சமயங் களிலும் சரியான வழியைக் கண்டுபிடிப்பதில் வெற்றி பெறுகிறான்.

காயத்ரி உண்மையில் ஓர் அற்புதமான சாதனை. இதன் சக்தியால் மனிதன் பல இக்கட்டுகளில் இருந்து தப்பியிருக் கிறான். இதைத் தெய்வீக சக்தி என்று சொல்லாமல் வேறு என்னவென்று கூறமுடியும்? உண்மை என்ன என்றால், காயத்ரி சாதனையால் சாதகனிடம் சில தெய்வீக சக்திகள் வெளியாகி நெருக்கடியான சமயத்தில் அவனுக்கு உதவி புரிகின்றன. யாரொருவன் சாதனையினால் மனம், அறிவு ஆகியவற்றை

ஒரு கட்டுப்பாட்டில் நிறுத்தி புனிதமாக வைத்துக் கொள்கிறானோ, பொறாமை, துவேஷம் ஆகிய பாவங்களை விட்டொழித்து மற்றவர்களின்பால் நன்மை பயக்கும் எண்ணங்களை ஏற் படுத்திக் கொள்கிறானோ, அவனுக்குத் தெய்வீக சக்திகள் துணை புரியும்.

**பூவுலகக் காமதேனு காயத்ரி**

சுவர்க்கத்தில் தேவதைகளிடம் காமதேனு என்னும் பசு உள்ளது. அது, அமிர்தம் போன்ற பாலைச் சுரக்கும். அதைப் பருகித் தேவர்கள் எப்போதும் சுகமாகவும், திருப்தியாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கிறார்கள் என்று புராணங்களில் கூறப் பட்டுள்ளது. அதனிடம் செல்பவர்களின் விருப்பங்கள் எல்லாம் பூர்த்தியாகும் என்றும் கூறப்படுகிறது. சுவர்க்கத்திலுள்ள காம தேனுவைப் பற்றிய உண்மையைத் தேவர்கள்தான் அறி வார்கள். ஆனால், இவ்வுலகின் காமதேனு காயத்ரி சக்தியாகும். காயத்ரி சாதனையினால் எல்லாத் தாகங்களும் தணியும். முடியாத, தேவையற்ற, பயனற்ற ஆசைகள் குறைந்து விடுவதால் மனதிலுள்ள சிறந்த விருப்பங்கள் பூர்த்தியாகும் நிலை தானா கவே ஏற்பட்டுவிடுகிறது. காமதேனுவின் பாலை அருந்துவ தால் பாப தாபங்கள் மறைந்து விடுகின்றன. காயத்ரியைச் சரண் அடைந்து அதன் அமுதத்தைக் குடிப்பவர்களுக்குத் துக்கங் களும், கஷ்டங்களும், பாபங்களும் குறையும்.

உண்மையில் மனிதனின் நிஜ ரூபம் ஆனந்தத்தால் தான் நிரம்பியுள்ளது. ஆனந்தத்தில் மூழ்கியிருப்பதுதான் அதனு டைய முக்கியமான குணம். துக்கம் விலகியதும் அது தன் மூல ரூபத்தை அடைகிறது. மனிதனும் சுவர்க்கத்திலுள்ள தேவர் களைப் போல் ஆனந்தமாக இருக்க முடியும். இதற்கு அவன் தன் கஷ்டங்களின் காரணங்களுக்குச் சமாதானம் பெற முடியும். காயத்ரி சாதனை இந்தச் செயலைச் செய்கிறது.

மனிதன் துக்கப்படுவதற்கும், கவலையடைவதற்கும் முக்கியமாக மூன்று காரணங்கள் உண்டு. அவை அறியாமையும், சக்தியின்மையும், ஏழ்மையுமாகும்.

அஞ்ஞானம் அல்லது அறியாமை : அறியாமையின் காரணமாகத்தான் மனிதன் தாறுமாறாகச் சிந்திக்கிறான். எதை நினைக்கத் தேவையில்லையோ அதை நினைக்கிறான். சிக்கலில் சிக்கிக் கொண்டு வேதனையும், துக்கமும் அடைகிறான். தன்னுடைய திறமையைப் பற்றியும், தகுதியைப் பற்றியும் சரியான அறிவு இல்லாததால் தான் செய்ய முடியாத வேலைகளை எடுத்துக் கொண்டு நிராசையையும், தோல்வியையும் தழுவுகிறான். மற்றும் சிலர் தம்முடைய எல்லை எது என்பதை உணராமல் தவறான ஆசைகளின், எதிர்பார்ப்புகளின் கற்பனைகளில் வாழ்கிறார்கள். இறுதியில் துக்கத்திலும், நிராசையிலும் திணறி துன்பத்தில் அவதிப்படுவார்கள். தன் அறியாமையின் காரணமாகக் கிட்டியுள்ள நன்மைகளைப் பற்றி எண்ணாமல் ஒரு நொடிச் சுகமென்னும் சுழலிலோ அல்லது லாபமென்னும் சுழலிலோ மாட்டிக் கொண்டு செயல்படுவதால் துக்கமும், பச்சாதாபமும் தான் கையில் கிடைக்கிறது.

தவறான சிந்தனையினால் சிறு சிறு சொற்களும் மிகுந்த துன்பத்தைத் தருவதாகின்றன. பிரியமானவர்களின் மரணம், தோழர்களின் வேறுபட்ட எண்ணங்கள், சூழ்நிலைகளின் ஏற்றத்தாழ்வு ஆகியவை சகஜமானவைதான். ஆனால் மனிதன் தன் அறியாமையால் அவற்றை முரணாகக் கருதுவதுடன் தான் நினைத்தபடியே எல்லாம் நடக்க வேண்டும் எனவும் எண்ணுகிறான். தன் எண்ணத்திற்கு மாறானவை நிகழக்கூடாது என்று எதிர்பார்க்கிறான். நடைபெற முடியாத ஆசைகளுக்கு விரோதமான நிகழ்ச்சி ஏற்பட்டால் கஷ்டம் மிக அதிகமாகிவிட்டதாகப் பாவிக்கிறான்.

**சக்தியின்மை** : மனிதனுக்கு ஒவ்வொரு நொடியிலும் சகிக்க முடியாத வேதனையும், துன்பங்களும் நிறைந்த வாழ்க்கையை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது. அச்சமயங்களில் மனிதன் தானே சுமக்க வேண்டிய பாரங்களைக்கூட சுமக்க முடியாத நிலையில் தீனனாய், தரித்திரனாய், பிறருடைய உதவியை எதிர்நோக்கியிருக்கும் பரிதாப நிலையை வேறு வழியின்றி அனுபவிக்க வேண்டியுள்ளது.

உடல்நிலை சரியில்லாமலோ, நோய்வாய்ப்பட்டோ இருந்தால் சுவையான உணவு, இனிமையான இசை, அழகான காட்சிகள், பணம் காசு, வாழ்க்கையின் மற்ற சுகபோகங்கள், சாதனங்கள் மகிழ்ச்சியைத் தருவதற்குப் பதிலாக துன்பத்தைத் தருவதாகவும், சுமையாகவும், தோன்றும். உடலின் பலவீனத்தால் மனிதன் இலக்கியம், மெய்யறிவு, காப்பியம், விஞ்ஞானம் ஆகியவற்றைப் படிப்பதிலோ, சிந்திப்பதிலோ, ஆராய்வதிலோ விருப்பமுள்ளவனாக இருக்க மாட்டான்.

உடல் பலவீனத்தால் தானாகப் படிப்பது, நல்லவர்களுடன் பழகுதல், பஜனை, பக்தி முதலியவற்றில் மகிழ்ச்சி கிட்டுவது அரிதாகிவிடுகிறது. எளியவர்களை நசுக்குவது, மேம்பட்டோரைக் காப்பாற்றுவது என்னும் இயற்கையின் நியதிப்படி அது வேலை செய்கிறது. நலிந்தவர்களை ஒழிக்கவும், துன்புறுத்தவும் பலவிதமான பொருள்கள் வெளிவருகின்றன. சிறுசிறு விஷயங்களும் அவர்களுக்கு மிகப் பெரிய சுமையாகத் தோன்றும். குளிர்காலம் விளையாட்டு வீரர்களுக்குப் பலத்தைக் கொடுத்து நன்மை பயக்கும். ஆனால் உடல் நலமற்றவர்களுக்கு நிமோனியா, மூட்டுவலி ஆகிய தொல்லைகளைத் தரும். பலவீனமானவர்களுக்கு மெய்ஞ்ஞானம் கூட பெருத்த நன்மை செய்யமுடியாது. ஆனால் உடல் நலம் பெற்ற, பலம் பொருந்தியவன் துக்கம், கஷ்டம் போன்ற

எதிர்ப்புகளிடையே தன் திறமையையும், குணங்களையும் வளர்த்துக் கொள்வான். சாதனை இன்மையால் மனிதன் திறமை யற்றவனாக, இலைகள் உதிர்ந்த மரம்போல் துன்பத்தை அனுபவிப்பான். உணவு, உடை, தோழன், நண்பன், பணம், மருந்து, புத்தகங்கள் போன்றவற்றின் உபயோகமில்லாததால் பலவிதமான துன்பங்களையும், கஷ்டங்களையும் சகித்துக் கொள்ள வேண்டியிருகிறது.

| | |
|---|---|
| காயத்ரி காமதேனுவின் - ஹ்ரீம் | - நல்லறிவை முக்கியமாகக் கொண்டது. |
| ஸ்ரீம் | - செழுமையை முக்கியமாகக் கொண்டது. |
| க்லீம் | - சக்திப் பிரதானமானது. |

இந்த மூன்று சக்திகளும் சாதகனின் அறிவின்மை, வலிமையின்மை, வறுமை ஆகிய கஷ்டங்களைக் குறைத்துத் துக்கத்தைப் போக்கவல்லது.

## யுகங்கள் தோறும் காயத்ரியின் வலிமை

ஈடிணையற்ற சக்தியால்தான் இந்திய கலாச்சாரத்தின் தாய் என்னும் கௌரவம் காயத்ரிக்கு ஏற்பட்டுள்ளது. ஒவ் வொரு யுகத்திலும் ரிஷிகளும், முனிவர்களும், வித்வான் களும் இதன் மகிமையைப் பாடியிருக்கிறார்கள். மற்ற விஷயங் களில் அவர்களுக்குள் கருத்து வேறுபாடு இருந்தாலும் காயத்ரி யைப் பொருத்தவரை வைதீக யுகத்திலிருந்து இக்காலம் வரை எல்லோரும் காயத்ரியின் மகிமையை ஒப்புக் கொண்டிருக் கிறார்கள்.

அதர்வண வேதத்தில் காயத்ரி ஸ்துதி சாதகனுக்கு ஆயுள், உயிர், சக்தி, புகழ், செல்வம், பிரம்ம தேஜஸ்

ஆகியவற்றைக் கொடுக்கும் என்று கூறப்பட்டுள்ளது. நான்கு வேதங்களிலும் காயத்ரிக்குச் சமமான வேறு மந்திரம் இல்லை என்பது ரிஷி விஸ்வாமித்திரரின் கூற்று. மனுவும் காயத்ரியை விட மேலான புனிதமந்திரம் இல்லை என்கிறார்.

தராசின் ஒரு தட்டில் எல்லா வேதங்களையும், மற்றொன்றில் காயத்ரீயையும் வைத்து நிறுத்தினால் காயத்ரி இருக்கும் தட்டின் எடைதான் அதிகமாக இருக்கும் என்று யோகிகளின் தலைவரான யக்ஞவல்கர் கூறுகிறார். யார் ஒருவன் காயத்ரியின் தத்துவத்தை நன்றாக அறிந்து கொள்கிறானோ அவனுக்கு உலகத்தில் எந்தத் துக்கமும் இருக்காது என்று அத்ரி மகாமுனி சொல்லியிருக்கிறார். பழத்தின் ரசம் தேனாகவும், பாலின் ரசம் நெய்யாகவும் ஆவதுபோல், காயத்ரி வேதத்தின் சாரம் என்பது வியாசமகரிஷியின் கருத்து. நன்கு பயின்று சித்திபெற்றவருக்குக் காயத்ரி காமதேனுவுக்குச் சமம் ஆகும். பிரம்மன் முதல் எல்லா தேவர்களும் காயத்ரியை ஜபிக்கிறார்கள். இது பிரம்ம சாக்ஷாத்காரம் செய்விக்கும் என்பது பரத்வாஜரின் கொள்கை. காயத்ரி பக்தியின் சொரூபம். எங்கு பக்தி ரூபமான காயத்ரி வசிக்கிறாளோ, அங்கு நாராயணன் இருப்பான் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை என்பது தேவரிஷி நாரதரின் வாக்காகும்.

இதைப் போன்ற கருத்துகள் பெரும்பாலும் எல்லா முனிவர்களிடமிருந்தும் கிடைக்கின்றன. புத்தி, தர்க்க, பிரத்யக்ஷயவாதிகளாகிய இக்காலத்து ஞானிகளும், மெய்ஞ் ஞானம் பெற்ற மகான்களும்கூட காயத்ரீயின் மகிமையை பழங்காலத்து முனிவர்கள் ஒப்புக் கொண்டதைப் போல ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ரவீந்திரநாத்தாகூரின் சொற்படி காயத்ரி பாரதத்தைத் தட்டியெழுப்பும் மந்திரம். ஒரே மூச்சிலேயே உச்சரிக்கும்படியான அளவு சரளமானது இந்த காயத்ரி மந்திரம்.

இது நல்லறிவைக் கொடுப்பதால் மந்திரங்களின் மணிமகுடம் என்கிறார் சுவாமி விவேகானந்தர்.

நீண்ட சாதனைகளுக்குப் பதிலாக இந்தச் சின்னஞ்சிறு காயத்ரி மந்திரச் சாதனையைச் செய்யும்படி ராமகிருஷ்ண பரமஹம்சர் ஆலோசனை கூறிவந்தார். இதற்குக் காயத்ரியின் அற்புத சக்திதான் காரணமாகும். ரிஷிகளால் அளிக்கப் பட்டுள்ள விலைமதிப்பற்ற இரத்தினங்களில் இது தலைசிறந்தது என்பது மதன்மோகன் மாளவியா அவர்களின் கருத்தாகும். இது ஆத்மாவைப் பிரகாசிக்கச் செய்து எல்லா பந்தங்களி லிருந்தும் விடுதலையளித்து லௌகீகமான குறைகளை நீக்கு கிறது. பூரண சுதந்திரம் அடைவதற்கு அரசியல் போராட்டம் மட்டுமல்லாமல் மக்கள் மனதின் ஆழத்தில் பிரகாசத்தையும் உண்டு பண்ண வேண்டும். இதை ஏற்படுத்தும் சக்தி காயத்ரி மந்திரத்தில் நிரம்பியிருக்கிறது என்கிறார் லோகமான்ய திலகர்.

காயத்ரி உடல்நலனைப் பாதுகாக்கும். அமைதியைக் கொடுக்கும். அதோடு ஆத்ம முன்னேற்றத்திற்கு ஊக்கம் தருவ தாகவும் உள்ளதென்று மகாத்மாகாந்தி ஒப்புக் கொண்டு இருக்கிறார். மகாயோகி அரவிந்தர், காயத்ரி மந்திரம் ஆத்மா வின் பல நிலைகளையும் பிரகாசிக்கச் செய்யும் பேராற்றல் வாய்ந்தது என்று கருதியதால் பலருக்குக் காயத்ரீ மந்திரத்தை யும் கற்றுக் கொடுத்தார்.

ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்களின் கூற்றுப்படி காயத்ரி முதன்மையான மந்திரம். அதன் மகிமையைப் பற்றிக் கூறுவது மனிதனின் ஆற்றலுக்கு உட்பட்டதல்ல. வாழ்க்கையின் குறிக்கோளை அடைய வேண்டுமென்ற அறிவு எதனால் ஏற்படு கின்றதோ அந்த அறிவுக்குத் தூண்டுதல் காயத்ரியினால்தான் கிடைக்கிறது. இராமனை அடைவது மிகக் கடினமான வேலை. காயத்ரியினால் புனிதமடைந்த அறிவினால்தான் இராமனை

அடையமுடியும் என்கிறார் சுவாமி இராம தீர்த்தர். இது வாழ்க்கையைப் பரம்பொருளுடன் இணைக்கும் மிகவுயர்ந்த பிரார்த்தனை என்கிறார் எஸ். இராதாகிருஷ்ணன். இது சிறந்த பலனைத் தருவது என்றும் அவர் கூறுகிறார். இதை எல்லா வற்றிலும் மேலான மந்திரம் என்றும், வேதங்களின் மூலமந்திர மென்றும், குரு மந்திரமென்றும் கருதுகிறார் ஆர்ய சமாஜ ஸ்தாபகர் சுவாமி தயானந்தர். அவர் இதை மிகச் சிரத்தையுடன் பயன்படுத்தியது மட்டுமல்லாமல், மற்றவர்களையும் இதை ஜபிக்குமாறும் புரச்சரணை செய்யுமாறும் ஊக்குவித்தார். காயத்ரியின் பொருளையும், ரகசியத்தையும் மனதில் ஒரு நிலைப் படுத்திச் சுத்தமாக உச்சரிப்பவனுக்கு சூரியனில் இருக்கும் மகா சக்தியுடன் தொடர்பு ஏற்படுகிறது. ஆதலால் அவனுக்கு உள்ளும் புறமும் மிகப் பெரிய அளவில் மெய்ஞ் ஞானத் தாக்கம் உண்டாகிறது என்று தியோஸாஃபிகல் ஸொஸைட்டியின் மிகவுயர்ந்த சாதகர் பேராசிரியர் ஆர். சீனிவாசன் கூறுகிறார்.

இந்த மேற்கண்ட உதாரணங்களால் காயத்ரி உபாசனை யானது குருட்டு நம்பிக்கையோ அல்லது மூடநம்பிக்கைப் பரம் பரையைச் சேர்ந்ததோ அல்ல என்பது தெளிவாகிறது. இதில் ஆத்மாவை மேம்படுத்தும் முக்கியமான தத்துவம் மறைந் துள்ளது. இது லோகரீதியாகவும் மனிதனை மேம்பட்ட வனாக்கும் சக்தி வாய்ந்தது.

## காயத்ரியைத் தவிர வேறு எந்த மார்க்கமும் இல்லை

வாழ்க்கையில் நல்லறிவு ஏற்பட்டால்தான் வெளியில் காணும் வெற்றிகளுக்கும் சுக செழுமைகளுக்கும் நற்பயன் இருக்கும். இதற்குக் காயத்ரி உதவி இன்றி வேறு வழி கிடையாது. இதைப் போல் கடவுளை அடையவோ, தன்னை அறிந்து கொள்ளவோ, ஜீவன் முக்தியைக் குறிக்கோளாகக்

கொண்டவர்களுக்கோ காயத்ரி தத்துவத்தைத் தவிர வேறு வழி ஒன்று மில்லை. கடவுளை அடைவது மட்டுமே வாழ்க்கையின் குறிக் கோளாகக் கொண்டிருப்பவன் கூட பரமன் உருவ மில்லாதவன், குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் என்பதை அறிய வேண்டும். அவன் ஐம்பொறிகளுக்கும் எட்டாதவன். அறிவுக்கும் சிந்தனைக்கும் கிட்டாதவன் என்பதை அறிய வேண்டும். அவன் யாரையும் விரும்புவதும் இல்லை; வெறுப்பதும் இல்லை. அவனை நேராக அடைய முடியாது.

பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் நடுவில் இயற்கை யின் திட்டமான திரை விழுந்திருக்கிறது. அதை இயற்கைச் சாதனங்களைக்கொண்டுதான் நீக்க முயலவேண்டும். சிந்தித்தல், மீண்டும் மீண்டும் நினைத்தல், தியானம், பிரார்த்தனை, விரதங்கள், அனுஷ்டானங்கள், சாதனை முதலிய எல்லா மெய்ஞ்ஞானச் செயல்களும் கடவுளை அடையும் வழிகள்தாம். இவற்றைத் தவிர வேறு விதமாகப் பரமனை அடைவது இயலவே இயலாது. சத்துவ குணத்தாலும், ஆத்ம சக்தியாலும் ஜீவாத்மா-பரமாத்மா இணைப்பு ஏற்பட முடியும்.

ஆத்மாவையும், பரமாத்மாவையும் இணைக்கும் இந்த சக்தி காயத்ரியே ஆகும். காயத்ரி என்னும் படிகளில் ஏறித்தான் பரமாத்மாவென்னும் கூரையை எட்ட முடியும். உண்மையில் சாக்ஷாத்காரம் என்னும் அனுபவம் காயத்ரி மந்திரத்தின் ஆழத்தில்தான் ஏற்படுகிறது. இதைவிட மேலே செல்லும் போது நுட்பமான இந்திரியங்களும், அவற்றின் அனுபவ சக்தியும் மறைந்துவிடுகிறது. இதனால் கடவுளை அடைய விரும்புகிறவர்கள் காயத்ரியுடன் கலந்த பரமனின் வடிவங்க ளான ராதா-கிருஷ்ணன், சீதா-ராமன், லக்ஷ்மீ-நாராயணன், பார்வதி-பரமசிவன் ஆகியவர்களை வழிபடுகிறார்கள். ஸரஸ்வதி, லக்ஷ்மி, காளி, மஹாமாயா, சீதா, ராதா, சாவித்ரி, பார்வதி ஆகிய தேவிகளிலும் நாம் காயத்ரியைத்தான் ஆராதிக்கிறோம்.

'காயத்ரி நான்தான்' என்று கீதையில் பகவான் கண்ணனே சொல்லியிருக்கிறான். பரமனை ஜபிக்கக் காயத்ரியைவிட உயர்ந்த மந்திரம் எதுவும் கிடையது. ஆதலால் பரமனை அடைய காயத்ரி தேவையில்லை என்று கூறுவது அறிவீனம் என்றுதான் சொல்ல வேண்டும். அது தவிர்க்க இயலாதது. பெயரளவில் எதிர்ப்பு தெரிவிக்கட்டும். கண்டிக் கட்டும். அது வேறு விஷயம். ஆனால் காயத்ரியைவிட்டு வேறு வழியில் செல்வது முடியாததாகும்.

## காயத்ரிதேவியின் உருவில் உலகத்தாயின் புனிதமான வழிபாடு

காயத்ரி வழிபாட்டில் கடவுளைத் தாயின் உருவில் வழிபடும் நல்ல வாய்ப்பு கிடைக்கிறது. உலகில் தாய்ப்பாசம் என்பது எல்லாவற்றையும்விட புனிதமானது. அப்பழுக்கற்றது. உயர்ந்தது, தாய் தன் குழந்தைகளிடம் செலுத்தும் அன்புபோல் மற்ற எந்த உறவினரும் அன்பு செலுத்த முடியாது. யௌவனத்தில் கணவன் மனைவி இடையே அன்பு அதிகமாகக் காணப்பட்ட போதிலும் தாய் அன்புக்கு அது ஈடாகாது. இவர்களிடையே நிலவும் அன்பு தமக்குள் கொடுத்தல், பெறுதல், தன்னலம், ஆசை ஆகியவற்றின் எதிர்பார்ப்பின் மேல் ஆதாரப்பட்டு இருக்கும். இதில் குறையோ, தடங்கலோ ஏற்பட்டால் இந்த அன்பு விரோதமாக மாற அதிக நேரம் பிடிக்காது. ஆனால் தாயின் அன்பு இதைப் போன்ற தடங்கல்களுக்கு உட்பட்ட தல்ல. குழந்தைகளால் நன்மை ஏற்படுவதற்குப் பதிலாக துன்பந் தான் கிடைக்கிறது. இருந்த போதிலும் அவள் வாத்சல்யம் நிறைந்த அன்பு ஊட்டுகிறாள். மகன் கெட்டவனாக இருந் தாலும் தாயின் அன்பு குறையாது. தன் மகன் கெட்டவனாக நடந்து கொண்டாலும், தாயானவள் கெட்டவளாக நடந்து கொள்ள மாட்டாள் என்பது பழமொழி.

கடவுளை நாம் எந்த உருவில் வழிபடுகிறோமோ அந்த உருவில் நமக்குத் தோன்றுகிறான். அப்படி அனுபவம் ஏற்படும்படிச் செய்கிறாள். நாம் பகவானை நேசிக்கிறோம். அவனிடமிருந்து அதே போன்ற அன்பைப் பெற விரும்புகிறோம். ஆதலால் தாயின் உருவில் பகவானைப் பூஜிப்பது மிகவும் ஏற்றதாகும். முறையாகவும் தோன்றுகிறது. தன் குழந்தையின் மேல் தாயின் அன்பு எப்படி இருக்குமோ அதைப் போன்ற அன்பை ஒவ்வொரு நொடியும் பெற கடவுளிடம் தாயைப் போன்ற தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது ஆத்ம வித்தையின் மனோதத்துவ கொள்கையின்படி மிக உபயோகமானதாகவும், லாபகரமானதாகவும் இருக்கும் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது.

கடவுளைத் தாயாக எண்ணி உலகத்தாய் வேதமாதா உருவில் வழிபடுவதால் இறைவனிடமிருந்து வாத்சல்யம் நிறைந்த தாயின் அன்பு கிடைக்கும். தாயின் மடியில் குழந் தைக்கு மிக ஆனந்தத்துடனும், பாதுகாப்புடனும், திருப்தி யுடனும் இருக்கும் அனுபவம் ஏற்படுகிறது.

பெண்மை எல்லா விதத்திலும் மரியாதைக்குரியதாகவும், பூஜைக்கும் போஷணைக்கும் உரியதாகவும் உள்ளது. இப்பெண்மை மனைவியின் உருவில், சகோதரியின் உருவில், தாயின் உருவில் தோழமைக்கும், அன்புக்கும், பூஜைக்கும் உரியதாகிறது. ஒரு ஆடவனின் முரட்டு மனதில் பெண்மையின் அன்பு செலுத்தப்படாவிட்டால், விஞ்ஞானிகளின் கருத்தின் படி, அந்த ஆடவனின் மனம் கடினமானதாகவும், நாகரிகமற்ற தாகவும், கருணையற்றதாகவும், குரூரமானதாகவும், ஆசை யில்லாமலும், குறுகிய மனப்பான்மை கொண்டதாகவும், மனம் விரிவடையாமலும் இருந்துவிடும். மழையினால் பூமி குளிர்ந்து ஆனந்தத்தை வெளிப்படுத்தப் பசுமையையும், பூக்களையும்,

பழங்களையும் ஏராளமாகத் தருகிறது. ஆடவனும் பெண்மையின் அன்பென்னும் ஊற்றால் உற்சாகம் பெற்றுத் தன் சக்திகளை விரிவடையச் செய்கிறான். இந்த அன்பானது வாசனையாக மாறும்போது அன்பு என்னும் அமுதம் விஷமாக மாறி விடுகிறது. வாசனை, விருப்பங்கள் என்னும் தடங்கல்கள் இல்வாழ்க்கையில் ஏற்படுகிறது. தீய வழக்கங்களும், நோக்கங்களும் வாசனைகளுடன் சேர்ந்து ஆண் பெண் வாழ்க்கையின் நல்ல பலனைக் கொடுத்து விஷவிதைகளாகச் செய்துவிடுகின்றன.

இந்தத் தீய எண்ணங்கள் குறைய காயத்ரி மிகவும் பயனுடையது. இறைவனைத் தாயாக எண்ணி வழிபடுவதால் புனிதமான பாவனைகள் ஏற்படுவதுடன் தாய்க்குலத்திற்கும் புனிதத் தன்மை அதிகரிக்கிறது. இவ்வழியில் எவ்வளவு வெற்றி கிடைக்கிறதோ அதே கணக்கில் இந்திரியங்களை அடக்குதல், மனக் கட்டுப்பாடு ஆகியவை மிகுதலும் மனதில் ஏற்படும் தீங்கான எண்ணங்கள் குறைதலும் தானாகவே ஏற்படுகின்றன.

தாயிடம் பக்தியுள்ளவன் மனதில் கெட்ட எண்ணங்கள் அதிக நேரம் நிற்காது. இறைவனை உலகத் தாயின் உருவத்தில் வழிபடுதல் ஆண் உருவத்தைப் பூஜிப்பதைவிட உயர்ந்ததாக நிரூபிக்கப்பட்டுள்ளது.

### காயத்ரி வழிபாட்டின் நியமங்களும், கோட்பாடுகளும்

காயத்ரி உபாசனையை எப்போது வேண்டுமானாலும் எந்த நிலையிலும் செய்யலாம். இது எல்லா நிலைகளிலும் லாபகரமானது. இதில் எவ்விதத்திலும் தீங்கு நேர வாய்ப்பு இல்லை. ஆனால் நியமப்படியான சாதனை மிகவும் மகத்துவம் வாய்ந்ததாகும். எந்தச் செயலானாலும் விதி முறைப்படி செய்தால் அதன் பலனும் நல்ல முறையில் இருக்கும். ஆதலால்,

காயத்ரி சாதகனுக்கு உபாசனை விதிகளையும், அதன் குறிக் கோள்களையும் கர்ம காண்டத்துடன் தொடர்பு கொண்ட எண்ணங்களையும் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

விதிமுறைப்படி வழிபடுவதற்குப் பூஜை செய்ய ஒரு இடம் தேவை. வீட்டில் அமைதியான தனிமையான இடத்தைத் தேர்ந்தெடுக்கவும். உருவ பூஜை செய்பவர்கள் பீடத்தில் காயத்ரி தேவியின் உருவத்தை ஸ்தாபனை செய்ய வேண்டும். அருவ உருவில் பூஜிப்பவர்கள், சூரியனின் சித்திரத்தையோ, ஜோதி அல்லது ஊதுவத்தி ஆகியவற்றை வைத்துப் பூஜிப்பார்கள். தெய்வத்தை ஸ்தாபனை செய்யச் சாந்திகுஞ்சில் தயாரிக்கப் பட்டுள்ள சித்திரம் மிகவும் உபயோகமானதாக இருக்கும்.

உபாசனை செய்வதற்கு விடியற்காலை மிகவும் ஏற்ற நேரமாகும். முடிந்தவரை காலைக்கடன்களை முடித்துக் கொண்டு ஸ்நான பானாதிகள் செய்தபின் பூஜை செய்ய உட்கார வேண்டும். உடல்நிலை சரியில்லாமல் இருந்தாலும், வெட்ப தட்பங்கள் ஏற்றதாக இல்லாவிட்டாலும், ஏதாவதொரு நிர்பந்தம் உண்டா னாலும் கைகால் அலம்பிக் கொண்டு பூஜை செய்யலாம். உபாசனையுடன் இணைந்து சிறிதளவு கர்மகாண்டத்தைப் பாவனையின் மூலம் பூர்த்தி செய்ய வேண்டும். எங்காவது வெளியிலோ அல்லது தவிர்க்க முடியாத நிலையிலோ இருந் தாலும் பூஜை விதிகளை நினைத்துக் கொண்டு பாவனையில் பூஜை செய்ய வேண்டும்.

பத்மாசன நிலையில் ஆசனத்தில் நேராக அமர வேண்டும். சௌகரியமில்லாத ஆசனத்தில் இருந்தால் மனம் நிலையாக நிற்காது. எதுவும் விரித்துக் கொள்ளாமல் தரையில் உட்காரக்கூடாது. தர்ப்பைப்புல் அல்லது பாய் ஆசனம் மிகவும் ஏற்றது. ஜபமாலை துளசிமாலையாகவோ, சந்தன மாலை

யாகவோ இருப்பது சிறந்தது. பூஜை செய்யும் இடத்தில் ஜலம் நிறைந்த கலசம், வாசனையுள்ள ஊதுபத்தி அல்லது விளக்கை ஏற்றிவையுங்கள்.

காயத்ரி உபாசனையில் நான்கு விதமான செயல்கள் கூறப்பட்டுள்ளன. 1. ஆத்மசுத்தி, 2. தெய்வ ஆவாஹனம், 3. ஜபம் தியானம் மற்றும், 4. சூர்ய அர்க்ய தானம்.

முதன் முதலில் ஆசனத்தில் உட்கார்ந்து உடல், உயிர், மனச்சுத்திக்காக ஐந்து செயல்கள் செய்யப்படுகின்றன. இதைப் பிரம்ம சந்திய என்று கூறுகிறோம். 1. புனிதமாக்கிக் கொள் ளுதல், 2. ஆசமனம், 3. சிகாவந்தனம், சிகையை முடித்துக் கொள்ளுதல், 4. நியாசம் (அர்ப்பணித்தல்).

1. **புனிதமாக்கிக் கொள்ளுதல்** : இடது உள்ளங்கையில் ஜலத்தை எடுத்துக் கொண்டு அதை வலது கையால் மூடிக் கொண்டு கீழ்க்கண்ட மந்திரத்தை ஜபித்தபின் அந்த ஜலத்தைத் தலையிலும், உடல் முழுவதும் தெளித்துக் கொள்ள வேண்டும். இந்த மந்திர ஜலத்தினால் நம் மேல் புனிதத்தன்மை வர்ஷிக் கிறது என்றும் நாம் உள்ளும் வெளியிலுமாகப் புனிதமாகி விட்டோம் என்றும் பாவனை செய்து கொள்ள வேண்டும்.

ஓம் அபவித்ர: பவித்ரோவா ஸர்வாவஸ்தாம் கதோபிவா ।
ய ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப் யந்தர: ஸுசி:
ஓம் புனாது புண்டரீ காக்ஷ: புனாது புண்டரீ காக்ஷ: புனாது ।

2. **ஆசமனம்** : பாத்திரத்திலிருந்து ஜலத்தை வலது உள்ளங்கையில் எடுத்துக் கொண்டு மூன்று முறை ஆசமனம் செய்யவும். ஒவ்வொரு முறை ஆசமனம் செய்யும் போதும் கீழ்க்கண்ட மந்திரத்தை வரிசைக் கிரமத்தில் சொல்லவும்.

**மந்திரம் :**

1. ஓம் அம்ருதோ பஸ்தரணமஸி ஸ்வாஹா
2. ஓம் அம்ருதாபி தான மஸி ஸ்வாஹா
3. ஓம் ஸத்யம் யஷ: ஸ்ரீர் மயி ஸ்ரீ: ஷ்ரயதாம் ஸ்வாஹா.

ஒவ்வொரு ஆசமனத்துடனும் காயத்ரியின் மூன்று சக்திகளின் தாரைகள் - நல்ல புத்தி, செழுமை, வலிமை இம்மூன்றும் தாய்பால் போல் நம்முள் செல்கின்றன என்று உணரவேண்டும்.

3. **சிகாவந்தனம்** : சிகாபர்சம் : தலைமுடியைத் தொடுவது அல்லது முடித்துக் கொள்வது. கீழ்க்காணும் மந்திரத் தைச் சொல்லிக் கொண்டு தலைமுடியைத் தொட வேண்டும் அல்லது முடிந்து கொள்ள வேண்டும். இதன் பொருள் எப்போதும் நல்ல எண்ணங்கள் தலையில் நிற்க வேண்டும் என்பதாகும்.

**மந்திரம் :**

சித் ரூபிணி மஹா மாயே திவ்யதேஜ: ஸமன்விதே ।
திஷ்ட தேவி சிகா மத்யே தேஜோ விருத்ம்குருஷ்வ மே॥

4. **பிராணாயாமம்** : இதில் சுவாசத்தை நிதானமாக உள்ளே இழுத்து, நிறுத்தி பிறகு வெளிவிடும் செயல் நடை பெறுகிறது. மூச்சை உள்ளே இழுக்கும்போது நம்மைச் சுற்றிப் பரவியிருக்கும் காயத்ரி பிராணசக்தியை மூச்சுடன் உள்ளே எடுத்துக் கொள்கிறோம் என்று பாவிக்க வேண்டும். நெஞ்சில் காற்றை நிறுத்தும்போது சூரியனுக்கு ஏற்ற பிரகாசம் நம்மில் ஒவ்வொரு அணுவிலும் நிரம்புவதாக எண்ண வேண்டும்.

மூச்சை வெளியில் விடும்போது நம்முள் இருக்கும் குற்றங் களும், கெட்ட எண்ணங்களும் வெளியேறுகின்றன என்று எண்ண வேண்டும். வெளியே மூச்சை நிறுத்தும்போது அது நம் பாவங்களை நாசம் செய்துகொண்டு வெளி யேறுகிறது என்றும் உள்ளே நல்ல அறிவும், ஒளியும் பெறுகிறது என்றும் நினைக்க வேண்டும். மூச்சை உள்ளே நிறுத்தும் நேரம், உள்ளே இழுப் பதற்கும், விடுவதற்கும் ஆகும் நேரத்தில் பாதியாக இருக்க வேண்டும். மந்திரம் சொன்ன பிறகு பிராணாயாமம் செய்ய வேண்டும். இதை மூன்று முறை செய்ய வேண்டும்.

**பிராணாயாம மந்திரம் :**

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப:
ஓம் ஸத்யம்। ஓம் தத்ஸ விதுர் வரேண்யம் பர்கோ
தேவஸ்ய தீமஹி
தீயோ யோநஹ: ப்ரசோதயாத் । ஓம் ஆபோ ஜ்யோதி ரஸோ
அம்ருதம் பிரம்ம பூர் புவ: ஸ்வ: ஓம்।

5. **நியாசம் (அர்ப்பணித்தல்) :** இடது உள்ளங்கையில் ஜலம் விட்டுக் கொண்டு வலது கை ஐந்து விரல்களையும் நனைத்துக் கிரமமாக மந்திர உச்சரிப்புடன் வாய், மூக்கு, கண்கள், காதுகள், புஜங்கள், தொடைகளின் மேல் ஸ்பர்சிக்க வேண்டும். முதலில் இடது புறமும், பிறகு வலது புறமுமாகத் தொட வேண்டும். இதனுடைய கருத்து முக்கியமான எல்லா இந்திரியங்களையும் புனிதமாக்குவதாகும்.

ஓம் வாங் மே ஆஸ்யே ஸ்து - வாயின் இரு ஓரங்கள் (உதடுகள்)

ஓம் நாஸோர் மே ப்ராணோஸ்து -
(மூக்கின் இரு துவாரங்கள்)

ஓம் அக்ஷ்ணோர் மே சக்ஷுரஸ்து - (இரு கண்கள்)

ஓம் கர்ண யோர் மே ஸ்ரோத்ரமஸ்து - (இரு காதுகள்)

ஓம் பாஹ்வோர் மே பலமஸ்து - (இரு புஜங்கள்)

ஓம் ஊர்வோர்மே ஓஜோஸ்து - (இரு தொடைகள்)

ஓம் அரிஷ்டானி மே ங்கானி
தனுஸ்தன்வா மே ஸஹஸந்து - (உடல் முழுவதும்)

நியாசத்துடன் ஆத்ம சுத்திக்கான ஐந்து செயல்களும் முடிவடைகின்றன. சாதகனின் அசுத்தம் நீங்கி சுத்தமடையவும் புனிதத் தன்மை வளரவும் இது செய்யப்படுகிறது.

உடல், உயிர், மனம் சுத்தமாக இருப்பவர்கள்தான் பூஜை செய்யத் தகுதி பெற்றவர். இதன் பின் பூஜைக் கிரமம் ஆரம்ப மாகும்.

**குறிப்பு :** ஆத்ம சுத்திக்கான இந்த ஐந்து செயல்களும் காயத்ரி மந்திரத்தினாலேயே செய்யலாம் என்பது அறியத் தக்கது.

**தேவபூஜை :** இதில் முதலில் பூமித் தாயைப் பூஜை செய்ய வேண்டும். எந்த மண்ணில் நாம் பிறந்தோமோ, எந்த மண்ணில் குதித்து விளையாடி பெரியவர்கள் ஆனோமோ அதுதான் முதல் தெய்வம். ஆதலால்தான் இஷ்டதேவியின் பூஜைக்கு முன் பூமி பூஜை செய்யப்படுகிறது. பூஜிக்கும்போது பரந்த மனமும், தைரியமும், பொறுமையும் ஏற்பட வேண்டும் என்ற எண்ணம் இருக்க வேண்டும். பூமியின் மேல் ஒரு உத்தரணி ஜலத்தை விட்டு கீழே கொடுக்கப்பட்டுள்ள மந்திரத் துடன் பூஜை செய்யவும்.

ஓம் ப்ருத்வி த்வயா த்ருதா லோகா,
தேவி த்வம் விஷ்ணு நாத்ருதா
த்வம் ச தாரய மாம் தேவி। பவித்ரம் குரு சாஸனம் ॥

இதன் பிறகு ஆதி சக்தியான காயத்ரியை ஆவாஹனம் செய்யவும். நம் பிரார்த்தனைக்கு இணங்க காயத்ரியின் சக்தி அவதரித்து அதில் நிலைப்பதாகப் பாவனை செய்து கொள்ள வேண்டும்.

**ஆவாஹன மந்திரம் :**

ஓம் ஆயாது வரதே தேவி த்ரயக்ஷரே பிரம்ஹ வாதினி
காயத்ரிச் சந்தஸாம் மாத: பிரம்ஹ யோநிர் நமோஸ்துதே ।
ஓம் ஸ்ரீ காயத்ரியை நம: ஆவாஹயாமி,
ஸ்தாபயாமி, பூஜயாமி,
த்யாயாமி, ததோ நமஸ்காரம் கரோமி ।

இதை அடுத்து குரு ஆவாஹனம் செய்ய வேண்டும். சீடனுக்கு வழி காட்டுவது குருவின் உயர்ந்த அம்சமாகும். பூஜைக்குரிய குரு அவர்களையும், மாதாஜி அவர்களையும் வணங்கி உபாசனையின் வெற்றிக்காகக் கீழ்க்காணும் மந்திரத்தை உச்சரித்து குரு ஆவாஹனம் செய்ய வேண்டும்.

**மந்திரம் :**

1. ஓம் குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு
குருர் தேவோ மஹேஸ்வர: ।
குரு ரேவ பரப்ரஹ்மா தஸ்மை ஸ்ரீ குருவே நம: ॥

2. அகண்ட மண்டலாகாரம், வ்யாப்தம் யேன சராசரம் ।
தத் பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குருனேவ நம: ॥

ஓம் ஸ்ரீ குருவே நம: ஆவாஹயாமி, ஸ்தாபயாமி, பூஜயாமி, த்யாயாமி, ததோ நமஸ்காரம் கரோமி.

தேவதைகளின் பூஜைக்குப் பின் ஜபம், தியானம் செய்ய வேண்டும்.

**ஜபம் :** குறைந்தது ஜபமாலையில் மூன்று முறை அல்லது சுமார் 15 அல்லது 20 நிமிடங்கள் ஜபம் செய்ய வேண்டும். அதிகம் செய்தல் மிகவும் உத்தமம். சாதாரண கிரமமாக இதைப் பதினோறு மாலைகள் வரை அதிகரிக்க முடியும். ஜபம் செய்யும்போது உதடுகள், தொண்டை, வாய் அசைவு இருந்தும் அருகில் இருப்பவர்களுக்கு நம் குரல் கேட்காதபடி இருக்க வேண்டும்.

ஜபம் என்பது மனதைத் தேய்த்துச் சுத்தம் செய்யும் முறை என்று கருதப்படுகிறது. அடிக்கடித் தேய்ப்பதால் பொருள்கள் பளபளப்பைப் பெறுகின்றன. சோப்பினால் துவைப்பதால் துணியின் அழுக்கு நீங்குகிறது. தேய்த்துக் குளிப்பதால் உடல் அழுக்கு நீங்குகிறது. இந்த வேலைகளை யெல்லாம் திரும்பத் திரும்பச் செய்கிறோம். இதைப் போலவே திரும்பத் திரும்ப ஜபம் செய்வதால் மனதிற்கும், அந்தக் கரணத்திற்கும் மேன்மை ஏற்படுகிறது. ஜபம் செய்வதால் நம் தீய குணங்கள் சுத்தம் அடைகின்றன. மேன்மேலும் சுத்த மாகவும், புனிதமாகவும் ஆகிவிடுகின்றன. தீய புத்திக்குப் பதிலாக நல்லறிவு ஏற்படுகிறது என்ற எண்ணம் சாதகனின் மனதில் இருக்க வேண்டும்.

காயத்ரி உபாசனையில் ஜபத்துடன் தியானம் பிரிக்க முடியாமல் இணைந்திருக்கிறது. ஜபம் முக்கியமாக உடல் உறுப்புகளால் செய்யப்படுகிறது. ஆனால் தியானத்தில் மனத்தைக் கடவுளுடன் இணைக்கவும், ஒன்றிடவும் முயற்சி செய்யப்படுகிறது.

**தியானம்** : இதில் நம் விருப்பம்போல் உருவமாகவும் அல்லது அருவமாகவும் தியானத்தை மேற்கொள்ளலாம். காயத்ரி மகா சக்தியைத் தாய் உருவில் உபாசிக்கும் சாதகன் விடியற்காலையில் தங்க நிறத்தில் ஒளிரும் சூரியனில் அன்னத்தின் மேல் வீற்றிருக்கும் காயத்ரி மாதாவைத் தியானிக் கிறான். தன்னைச் சிறு குழந்தையாகப் பாவித்து தாயின் மடியில் உட்கார்ந்து அவள் மனதையும், அன்பையும் பெறுவதாக எண்ண வேண்டும். தாயின் பாலை அருந்தும் போது அத்துடன் நல்லறிவையும், ஞானம், சாகசம், சக்தி போன்றவை கிடைக்கின்றன என்று நினைக்க வேண்டும். தன்னுடைய மனிதத்தன்மை அறிவும், தூய்மையும் பெற்று மகத்துவம் வாய்ந்ததாகப் பெருகி வருகிறது என்ற எண்ணம் மனதில் நிறைந்திருக்க வேண்டும்.

நாம் தியானிக்கும் காயத்ரி மாதா ஒரு பெண் மாத்திர மல்ல. எல்லா நற்குணங்களுக்கும், திறமை வலிமைகளுக்கும் ஒரு தெய்வீக ஊற்றாகும். கிரமமாக இத்தகைய எண்ணங் களையும், கற்பனைகளையும் வளர்த்துக் கொண்டால் தியானத் தின் திறமை அதிகரிக்கும். தாய்க்கும் சேய்க்கும் நடுவில் தோன்றும் ஆனந்த கோலாகலம் நிறைந்த அன்பும், வாத்சல் யமும் தாம் பெறுவது போன்ற அனுபவம் கிடைக்கும். சிறிது சிறிதாக தியானத்தில் ஒன்றிடுவான். சாதகன் சிறு குழந்தை யின் தன்மையை அடைவான். அந்த நிலை ஏற்பட்டால் சாதனையில் ஒரு பெரிய படியைக் கடந்துவிட்டதாகக் கருதலாம்.

தாய்ப்பாலுக்குச் சமமான காயத்ரியின் அருள் அமுதத்தை அருந்தும்போது அது உயிருக்கு வலிமை சேர்ப்பதாகும் என்பது மட்டுமல்லாமல், இது ஒவ்வொரு உறுப்பிலும், மனத்திலும், புத்தியிலும், இதயத்திலும் வேர்விட்டுப் படர்ந்திருக்கும் தீய

எண்ணங்களை எரித்துச் சாம்பலாக்கிவிடும் என்ற எண்ணம் சாதகனுக்கு இருக்க வேண்டும். இந்த அமுதத்தின் தாக்கம் சஞ்சீவனி லேகியத்தைப் போன்றது. இது புத்துணர்ச்சி தருவ தாகும். இதுவரை நீசனாக இருந்தவன் மகானாகிவிட்டான்; மிருகமாகவும், அரக்கனாகவும் இருந்தவன் மனிதனாகவும், தெய்வத்தன்மை பொருந்தியவனாகவும், நரனாக இருந்தவன் நாராயணனாக மலர்ந்து வருகிறேன் என்று சாதகன் உணர வேண்டும். கடவுளின் எல்லா சிறப்பான குணங்களும் என்னிடம் இடம் பெற்று வருகின்றன. நான் வேகமாக உயர்வை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறேன். நான் புனிதத் தன்மையாலும், ஒன்றிவிடும் தன்மையாலும், தன்னம்பிக்கையாலும் நிரம்பிக் கொண்டிருக்கிறேன் என்று சாதகன் கருத வேண்டும்.

உருவமில்லாத தியானத்தில் காயத்ரி தேவியை உதிக்கும் சூரியன் வடிவத்தில் சாதகன் ஆராதிக்கிறான். ஆதி சக்தியின் மகிமை சூரிய கிரணங்களின் உருவில் நம் வரை வருகிறது. நாம் சூரிய ஒளியால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டு இருக் கிறோம் என்ற பாவனை ஏற்படுகிறது. இந்தப் பிரகாசமான கிரணங்கள் உடல் உறுப்புகளில் ஊடுருவி அவற்றை வலிமைப் படுத்துகின்றன. நாக்கு, பிறப்பு உறுப்புகள், கண்கள், மூக்கு, காதுகள் ஆகிய இந்திரியங்கள் இதன் பிரகாசத்தின் மூலம் புனிதமடைவதுடன் தீய நோக்கங்கள் எரிந்துவிடுகின்றன. உடலில் ஆரோக்கியமும், புனிதத்தன்மையும், வலிமையும் சேர்ந்தபின் தங்க மயமான சூரியக் கிரணங்கள் மனத்திலும் மூளையிலும் பிரவேசிப்பதாகப் பாவிக்கப்படுகிறது. இந்த ஒளியானது பிரவேசித்தவுடன் அங்குப் படர்ந்திருக்கும் கட்டுப் பாடின்மை, தன்னலம், பயம், அறிவின்மை ஆகியன மறைந்து கட்டுப்பாடு, சமநோக்கு, உயர்ந்த எண்ணங்கள் ஆகியவை மின்னத் தொடங்கும். மனமும், அறிவும், தூய்மையடைந்து

விழித்தெழுகின்றன. அதன் வெளிச்சத்தில் வாழ்க்கையின் குறிக்கோள் தெளிவாகிறது.

மனத்திற்கும், மூளைக்கும் காயத்ரி சக்தியின் பிரகாசம் எண்ணங்களின் மையமான இதயத்தில் நுழைகிறது. ஆதி சக்தியின் மேன்மையான ஒளியினால் வாழ்க்கை முழுமை பெறுகிறது. இதயத்தில் உள்ள நீசமான தன்மை, விரிவடையாத தன்மையை விலக்கிவிட்டுத் தனக்குச் சமமாக ஆக்கிவிடுகிறது. சாதகன் தன் சிறுமைகளைக் கடவுளுக்கு அர்ப்பணிப்பான். பரமன் தன் மகத்தான சக்தியைச் சாதகனுக்கு அருளுகிறான். பிரிந்த கன்றும், பசுவும் ஒன்று சேர்வதுபோல் ஆத்மாவான சாதகன் பரமாத்மாவுடன் இணைகிறான். ஒன்றிணைந்த ஆனந்தம ஏற்படுகிறது. ஜீவாத்மாவின் சிறிதளவு பிரகாசம் பரமாத் மாவின் பரந்து விரிந்த ஒளியில் கலந்துவிடுகிறது. விளக்கில் விழும் விட்டில் பூச்சியைப் போலவும், அக்னியில் விழும் ஆஹுதி போலவும் தன்னைப் பரமனுக்கு அர்ப்பணித்துத் 'தான்' என்பதை இழந்து விடுகிறான். இந்த இணைப்பினால் நல்லெண்ணங்கள் என்னும் அலைகள் பொங்கியெழுகின்றன. விருப்பங்கள் பின்பற்றக்கூடியதாகவும், நன்மை நிறைந்த தாகவும் இருக்கும். கடவுளின் கட்டளையின்படிச் சரியான பாதையில் செல்லும் சங்கல்பம் வலிவு பெறுகிறது. ஆத்மாவின் மேன்மையை ஒட்டி எண்ணங்களும், செயல்களும், செயல் படுத்தும் திறனும் வலுப்பெறுகின்றன. முடிவில்லாத ஒளிமய மான ஆனந்தக் கடலில் மூழ்கிய ஆன்மா, தன் நல்ல அதிருஷ்டத்தையும், தன் செயலின் பலனையும் அனுபவிக்கும்.

**சூர்ய அர்க்யம் :** ஜபமும், தியானமும் பூர்த்தி யடைந்த பின் பூஜைப் பீடத்தில் வைத்திருக்கும் கலச ஜலத்தைச் சூரியனை நோக்கி அர்க்கிய ரூபமாக கீழ்க்காணும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அர்க்கியம் விட வேண்டும்.

மந்திரம் :

ஓம் சூர்ய தேவ ஸஹஸ்ராம்சோ தேஜராசே ஜகத்பதே ।
அனு கம்பிய மாம் பக்த்யா க்ருஹாணார்க்கியம் திவாகர:
ஓம் சூர்யாய நம: ஆதித்யாய நம: பாஸ்கராய நம: ॥

இங்குக் கலச ஜலம் நம் சிறிய தன்மைக்கும், தாழ்ந்த தன்மைக்கும் அடையாளம் என்றால் சூரியன் எல்லையில்லா பிரம்மத்தின் சின்னம். தன் வாழ்க்கையின் பொருளைப் பரப் பிரம்மத்திற்கு சமர்ப்பித்தல்தான் சூர்ய அர்க்யத்தின் நோக்கம். அர்க்யம் விடப்படும் ஜலமானது ஆவியாகி ஆகாயத்தில் உயர்ந்து பரவுகிறது. சில இடங்களில் மழையாகவும், சில இடங்களில் பனித்துளிகளாகவும் விழுகின்றன. நம்முடைய பொருள், பெருமைகள் எல்லாம் சிறு கலசத்தில் இருக்கும் ஜலம்போல் எல்லைக்கோட்டுக்குள் இல்லாமல் வெளியில் வந்து நம் இஷ்ட தெய்வத்திற்கு அர்ப்பித்தலுடன் உலகம் முழுவதற்கும் பயன்படவேண்டும். மேலும் விரிவடைய வேண்டும் என்பதுதான் சூர்ய அர்க்யத்தின் நோக்கமாகும்.

## காயத்ரி மந்திரத்தின் நோக்கமும் சிந்தனையும்

ஜபம், தியானத்துடன் காயத்ரி மந்திரத்தின் பொருளை அறிதல் மிகவும் உபயோகமுள்ளதாகும். காயத்ரியை எல்லா வேளைகளிலும் செய்யலாம். காயத்ரி மந்திரத்தின் சொல் கிரமத்தின் கருத்து கீழ்க்கண்டவாறு உள்ளது.

ஓம் - பரமாத்மா, பூ: - பிராண ரூபமானது, புவ: - சுக ரூபமானது,

ஸ்வ: - துக்கத்தைப் போக்குவது, தத் - அது, ஸவிதுர் - ஒளிமயம்,

வரேண்யம் - எடுத்துக் கொள்ளத் தகுந்த (உயர்ந்த)

பர்கோ: - பாபத்தை நாசமாக்குவது, தேவஸ்ய - கொடுப்பவன், தீமஹி - நமதாக்கிக் கொள்ள, தியோ - அறிவை, யோ - எது, ந: - நம்முடைய, ப்ரசோதயாத் - தூண்டுகிறது.

"அந்த சுக ரூபமானது துக்கத்தைப் போக்கும். உயர்ந்த ஒளி பாபத்தை நாசம் செய்யும். பிராண ரூபமான பரமாத் மாவை எங்களுடையதாக ஆக்கிக் கொள்கிறோம். அவன் எங்களைச் சரியான பாதையில் செயல்பட வைக்கட்டும்."

காயத்ரியின் பொருளைப் பற்றி யோசிக்கும்போது மூன்று செய்திகள் தெரியவருகின்றன. 1. பரமனின் திவ்யமான குணங்களைப் பற்றிய சிந்தனை, 2. பரம்பொருளைத் தன்னுள் நிலைக்கச் செய்வதான பாவனை, 3. நல்ல அறிவைத் தர வேண்டுமென்ற வேண்டுகோள். இவை மூன்றும் மகத்துவம் வாய்ந்தவை.

மனிதன் எதைப் பற்றி நினைத்தாலும், எதைச் சிந்தித் தாலும், எந்தச் சொற்களால் மனமொன்றி தியானம் செய் கிறானோ அவையெல்லாம் கிரமமாக அவன் மனப்படலத்தில் உறுதியாகிவிடுகின்றன. வளரவும் செய்கின்றன. மனமும் அதே திசையில் ஓட ஆரம்பிக்கும். மறைமுகமானது, வெளிப்படை யானது, காணப்படுபவை, காணப்படாதவை ஆகிய பல இரகசியங்கள் இதிலிருந்து வெளியாகின்றன. வெற்றிகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து சேரும்.

காயத்ரி மந்திரத்தின் முதற்பகுதியில் பகவானின் சில குணங்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இவை மனித வாழ்க்கைக்கு மிகவும் மகத்துவம் வாய்ந்தவை. கடவுளை உயிராகவும், ஒளிமயமாகவும் நினைத்துத் துக்கத்தையும், பாவத்தையும் போக்குபவன், உயர்வானவன், ஆனந்தம ய மானவன் என்று கருதி மனதை ஒருநிலைப்படுத்தித் தியானித்

தால் மூளையில் இக்கருத்துகள் வளர்ந்துகொண்டே போகும். மனம் அதன்பால் ஈர்க்கப்படும்; பழக்கப்படும். மனிதன் இதை ஆதாரமாகக் கொண்டு செயல்படத் தொடங்குவான். இவ்வாறு ஒரு புது அனுபவம், எண்ண ஓட்டம், செயல்முறை வாழ்க் கையை உள்நோக்கிலும், புறநோக்கிலும் நாள்தோறும் மேன்மை யானதாகவும், சிறந்ததாகவும் உயர்த்திக் கொண்டே போகும்.

இரண்டாம் பகுதியில், மேலே சொல்லப்பட்ட குணங்கள் பொருந்திய பரமாத்மாவைத் தனதாக்கிக் கொள்ள உறுதி செய்து கொள்வது பற்றி கூறப்பட்டுள்ளது. இறைவனை எண்ணினால் மட்டும் போதாது. இறைவனைத் தன் மனத்தில் நிரப்பிக் கொள்ளவும் வேண்டும். ஒவ்வொரு மயிர்க்காலும் பகவானின் உயர் குணங்களால் நிரம்பி வழிய வேண்டும் என்பது காயத்ரி சாதகனுக்கான கட்டளையாகும். பகவான் உள்ளும் புறமும் இருக்கிறான்; நம்முடைய தன்மை முழுவது மாக அவனில் மூழ்கிவிட்டது என்று அனுபவிக்க வேண்டும். இதைப் போன்ற எண்ணத்தில் எவ்வளவு நேரம் ஆழ்ந்திருப் பானோ அதுவரை அவன் விகாரங்களில் இருந்தும் தீங்கான பாவனைகளிலிருந்தும் விலகியிருப்பான்.

மூன்றாவது பகுதியில் இறைவனிடம் நற்புத்தி அளிக்கு மாறு வேண்டப்படுகிறது. தீய எண்ணங்கள், கீழ்த்தரமான வேட்கைகள், தீய பாவனைகளிலிருந்து தன்னை விடுவித்து நல்லறிவும், விவேகமும் தரவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளப் படுகிறது.

இந்த வேண்டுகோளில் காயத்ரி மந்திரத்தின் முதல் இரு பகுதிகளில் கூறப்பட்டிருக்கும் உயர்ந்த குணங்களைப் பெறு வதற்கும், அவற்றைத் தனதாக்கிக் கொள்வதற்கும் வழிகள் கூறப்பட்டுள்ளன. நாம் விருப்பம், வேட்கை மற்றும் தான்

என்ற மமதை ஆகிய தீய குணங்களைச் சரியான பாதையில் கொண்டுவரவேண்டும். அறிவைச் சாத்வீகமாக ஆக்கிக் கொள்ளவேண்டும். அறிவிலிருந்து தீங்கான நோக்கங்களும், நெறி கெட்டு அலையும் நிலையும் குறையக் குறைய நல்லறிவு வளரும். அதை அனுசரிக்க, வாழ்க்கையில் அமைதி, இன்பம், வெற்றி, வளமை ஆகியவை நிறைந்து கொண்டிருக்கும்.

காயத்ரியின் இரண்டு புனிதமான அடையாளங்கள் சிகையும், (குடுமி) யக்ஞோபவீதமும் (பூணூல்) ஆகும். காயத்ரி சாதனையுடன் சிகையும், யக்ஞோபவீதமும் புனித அடையாளங்களாக நீக்கமற இணைந்திருக்கின்றன. காயத்ரி மந்திர தீட்சையுடன் இவற்றையும் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். இந்த விஷயத்தில் மறு ஜன்மத்தின் கட்டுப்பாடு இணைந் துள்ளது. இவை இல்லாமல் சாதனை செய்யமுடியாது என்பதல்ல. செய்யக்கூடாது என்பதுமல்ல. கடவுளின் மகா சக்தியான காயத்ரியை உபாசிக்க எவ்வித நிபந்தனையும் கிடை யாது. ஆனால் தன் புண்ணியத்தினால் பெற்றுள்ள, விதி முறைப்படி கற்ற காயத்ரி உபாசனையை இது சுலபமாக்குகிறது.

வைதீகக் கலாச்சாரத்தில் சிகையும், யக்ஞோபவீதமும் இரண்டு புனிதமான அடையாளங்களாகும். பொறுப்பு வாய்ந்த செய்கையை நிர்வகிக்கும் ஒவ்வொரு நபருக்கும் தன் பொறுப்பையும் கடமையையும் நினைவுபடுத்த இந்த அடை யாளங்கள் தரப்பட்டுள்ளன. போலீஸ், டாக்டர், வக்கீல், சிப்பாய் முதலியவர்களுக்குத் தத்தம் கடமைகளை நினைவு படுத்தவும், அவர்கள் அதிகாரத்தை வெளிப்படுத்தவும் குறியீடு களும், சீருடைகளும் தரப்படுகின்றன.

பாரதப் பண்பாட்டில் மனிதனின் எண்ணங்களையும், செயல்களையும் மிருகத்தனத்திலிருந்தும், பிசாசுத் தன்மையி

லிருந்தும், காப்பாற்றுவதிலும் மனிதத் தன்மை அல்லது தெய்வத் தன்மையின் வழியில் முன்னேறுவதுதான் வாழ்க்கையின் வெற்றி என்று அறைகூவப்பட்டுள்ளது. இந்தச் சிறந்த எடுத்துக்காட்டைப் பின்பற்றும் ஒவ்வொருவராலும் சிகை மற்றும் பூணூல் ரூபமாக இக்குறிகளைக் கௌரவத்துடன் அணிந்து கொள்ளும் வழக்கம் இருந்து வருகிறது.

சிகையும், யக்ஞோபவீதமும் தெய்வ கலாசாரத்தின் மதிப்பிற்குரிய அடையாளங்கள் மட்டுமல்ல; உயர்ந்த நோக்கங்களுக்கும், எடுத்துக்காட்டுகளுக்கும் வாழ்க்கையுடன் இணைந்த பிரதிநிதியுங்கூட. பிறப்பினால் எல்லா மனிதர்களும், மிருக நிலையில்தான் இருப்பார்கள். அவர்களிடம், வேட்கை, தன்னலம், பொறாமை, வெறுப்பு போன்ற பல தாழ்ந்த குணங்கள் காணப்படுகின்றன என்பதைத் தெய்வ கலாசாரமும் ஒப்புக் கொள்கிறது. வளர்ந்த பிறகு அவர்களைக் கடைத்தேற்ற அறிவுரைகள் கற்பிக்கப்படுகின்றன. இந்த முயற்சியைத்தான் சுத்தப்படுத்தும் சடங்கு. தீக்ஷை, த்விஜா (குழந்தைப் பருவத்திலிருந்து பிரம்ம சரியத்தில் பிரவேசிப்பது) என்றும் யக்ஞோபவீத தாரணம் என்றும் பெயர்கள் தரப்பட்டுள்ளன.

முதல் பிறவி தாயின் வயிற்றிலிருந்து ஏற்படுகிறது. இரண்டாவது குருவின் மூலம் செயல்படுத்தப்படுகிறது. குருவானவர், தன் சீடனின் மனதென்னும் நிலத்தைப் பக்குவப் படுத்தி, அதில் உயர்ந்த எண்ணங்கள் என்னும் விதைகளை விதைத்து, நீரைப் பாய்ச்சிச் சீர்படுத்திக் காப்பாற்றுகிறார். முதலில் இருந்து கரடு முரடான நிலம் ஏற்ற சமயத்தில் அழகான பூந்தோட்டமாக மாறிவிடுகிறது. மிருகத்தனமும், பிசாசு குணங்களும் நிறைந்த நரக வாழ்க்கையை விட்டுவிட்டு, மனித வாழ்க்கையை மேற்கொள்ள சங்கல்பத்துடன் ஆசாரியனால் கொடுக்கப்பட்ட காயத்ரி தீக்ஷை மறு பிறப்புக்குச்

சமானமாகிறது. இதனால் காயத்ரி உபாச்கன் 'த்விஜ்' என்று கூறப்படுகிறான். இப்பொழுது தன் வாழ்க்கை மற்றவர்களுக்கு ஒரு எடுத்துக்காட்டாக இருக்க ஜீவிப்பதாக உறுதியுடன் முன்னேறுகிறான்.

யக்ஞோபவீத தாரணம், மறு பிறப்பின் உறுதி பூண்டலும், அறிவிப்பும், விருப்பமும் ஆகும். பூணூல் அணிந்தவுடனே மறு பிறப்பு ஆரம்பமாகிவிடுகிறது. கலாசாரத்தின் இந்த உயர்ந்த பரம்பரை மனிதனைச் சிறந்த கொள்கைகளுடன் இணங்கி வாழ ஊக்குவிக்கிறது. உண்மையில் யக்ஞோபவீதம் காயத்ரியின் உருவேயாகும். மற்ற தேவி, தேவதைகள் மூர்த்திகளாக ஒரு விசேடமான இடத்தில் ஸ்தாபனை செய்யப்படுகின்றன. ஆனால் காயத்ரியின் ரூபமான பூணூலை ஒவ்வொரு நொடியும் தன் மார்புடன் அணைத்தபடி வைத்துக் கொள்வதும், இதயத்தில் அமைத்துக் கொள்வதும் பூணூலின் மகிமையைக் காட்டு கின்றன. இது காயத்ரி மகா சக்தியின் உயர்ந்த பயனைத் தெளிவுபடுத்துகிறது.

யக்ஞோபவீதத்தின் ஒன்பது இழைகள், மூன்று முடிச்சுகம் (பூ: புவ: ஸ்வ:, ஒரு பெரிய முடிச்சு, பிரம்ம முடிச்சு பிரணவ மான ஓம் என்பதன் குறியீடாகும். காயத்ரியின் உருவமான பரமனின் சக்தி புஜங்கள், மார்பு, இதயம், முதுகின் மேல் பூணூல் அணியும் ஒவ்வொருவனும், அவனைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் கடவுளின் மாபெரும் சக்தியின் உருவில் சூழ்ந்திருக்கிறது. ஆதலால் கடவுளின் விருப்பப்படியும், அவர் மகிழ்ச்சி அடையும்படியும் தான் வாழ வேண்டும் என்று நினைக்கவேண்டும். பூணூல் என்பது மனிதனின் கழுத்தில் அணிவிக்கப்பட்டிருக்கும் அறக் கயிறாகும். அது மனிதனை தருமம், நீதி, ஒழுக்கம் என்னும் பந்தங்களில் கட்டிவைத்து மானிடக் கட்டுப்பாடு என்னும் எல்லைக் கோட்டுக்குள் வாழ வேண்டுமென்பதை நினைவுபடுத்துகிறது.

**சிகை :** தெய்வீகக் கலாசாரத்தில், எடுத்துக்காட்டத் தக்க பாதையில் செல்ல உறுதி பூண்டிருக்கும் மனிதனின் தவிர்க்க முடியாத குறி சிகையாகும். அது தலை என்னும் கோட்டையின் மேல் ஊன்றப்பட்டிருக்கும் கொடியாகும். எப்படி அரசு அலுவலகங்களின் மேல் மூவர்ணக்கொடி பறந்து கொண்டிருக் கிறதோ அது போல ஒவ்வொரு காயத்ரீ உபாசகனின் மூளை யென்னும் கோட்டையின் மேல் தேவ கலாசாரத்தின் வெற்றிக் கொடி சிகை வடிவத்தில் பறக்கிறது. உபாசனையின் போது 'சிகா வந்தனம்' என்னும் சடங்கு கொடி வணக்கம் செலுத்துவது போலாகும். தேவகலாசாரத்தைப் பின்பற்றுபவன் ஒவ்வொருவ னுடைய மூளையும் உயர்ந்த கருத்துக்களின் மையமாக இருக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன்தான் சிகை வைத்துக் கொள்ளும் வழக்கம் உள்ளது.

கீழ்த்தரமான, தாழ்ந்த, தீங்கான, நீதியற்ற எண்ணங் களுக்கு இடமளிக்கவே கூடாது. அரசனின் கோட்டையில் அவனுடைய படைகளும், பிரஜைகளும், வாழ்வார்கள். விரோதிகள் அங்கு ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. அது போலவே மூளையென்னும் கோட்டையின் மேல் சிகை என்னும் அறக்கொடி பறக்கிறது. அதன் மெய்க்காப்பாளர்களின் வேலை தாழ்ந்த, தீய எண்ணங்களைக் கோட்டைக்குள் நுழைய விடாமல் காப்பதாகும். தன் சுபாவத்தையும், செயல்களையும், சிந்தனைகளையும் நன்முறை என்னும் அச்சில் போட்டுக் கொண்டே போகவேண்டும். மூளையை ஆராய்ந்த அறிஞர்கள் சிகையின் இடத்தை மூளையின் தொப்பூழ் என்றும், மூளையின் இதயம் என்றும் கூறுவார்கள். யோக சாத்திரத்தின்படியும் இங்கு நுண்ணிய சக்திகளின் மையமான ஸஹஸ்ர சக்கிரம் இருக்கிறது. இந்த மையம் பழத்தைக் கிளையுடன் இணைக்கும் காம்பு போல், கண்களுக்குப் புலப்படாத சக்திகளை மனிதனின் உணர்வு களுடன் இணைக்கிறது. இந்த இடத்திற்கு அடிபடுவதாலோ,

குளிராலோ, வெயிலாலோ தீங்கு ஏற்படக் கூடாது என்னும் நோக்கத்துடன் சிகை வைத்துக் கொள்ளப் படுகிறது.

எண்ணங்களைப் புனிதமாக்கும் தன்மை சிகையில் மறைந்திருக்கிறது என்றால் உடலையும் செயலையும் புனித மாக வைத்திருக்கும் வேலையைப் பூணூல் செய்கிறது. பூணூல் காயத்ரியின் செயலுக்கு உறுதிமொழி என்றால், சிகை காயத்ரி ஞானத்திற்கு உறுதிமொழி. அறிவும் செயலும் இணைந் தால்தான் மனித வாழ்க்கை முழுமை பெறுகிறது. பூணூலும், சிகையும் காயத்ரி சாதகனுக்குத் தேவையானது மட்டுமல்ல. இன்றியமையாததுமாகும் என்று கூறப்பட்டுள்ளது.

**காயத்ரீ மந்திர தீக்ஷையும், குருவை அடைவதும்**

யக்ஞோபவீதம், காயத்ரி மந்திர தீக்ஷையுடன் குருவைத் தேர்ந்தெடுத்தலும் இணைந்துள்ளது. காயத்ரியைக் குரு மந்திரம் என்றுங்கூடக் கூறுவார்கள். முற்காலத்தில் சிறுவர்கள் வித்யாப்பி யாசத்திற்குக் குருகுலம் செல்வார்கள். அச் சமயம் வேதாம்பரச் சடங்கின்போது குருமந்திரமாகக் காயத்ரி மந்திர தீக்ஷைதான் கொடுக்கப்படும். இக்காலத்தில் குரு என்று கூறிக் கொண்டு ஏதோ மந்திரங்களைப் படித்துவிட்டு குரு தீக்ஷையென்று டமாரம் அடிக்கிறார்கள். ஆனால் முற்காலத்தில் காயத்ரியைத் தவிர வேறு தீக்ஷா மந்திரம் கிடையாது.

குருவின் மூலமாகத்தான் மனிதன் தன் பற்றையும், நம்பிக்கையையும் மலரச் செய்கிறான். காயத்ரி மந்திர வெற்றிக்கு இந்த இரண்டு சொற்களுக்கும் மிகவும் உயர்ந்த இடம் உள்ளது. இவையில்லாமல் காயத்ரி சாதனையில் விரும்பத்தக்க வெற்றிக்கு ஆசைப்படுவதில் பலன் இராது.

சிரத்தை இல்லாத வெளிச் செயல்கள் எல்லாம் பூஜையின் குறிகளாக மட்டும் இருக்கும். குருவுக்கும்

சீடனுக்கும் நடுவில் சிரத்தை என்னும் வலுவான இணைப்பு இருக்கும். அதுதான் குறிக்கோள் வரை அழைத்துச் செல்லவும், சாதனையை வெற்றிபெறச் செய்யவும் திறமைபெற்றுள்ளது. எப்படி ஆரம்பத்தில் சிறு அம்பு எய்ய பழக்கப்படுத்திக் கொள்ளும் வீரன் படிப்படியாக வளர்ந்து சிறந்த வில்லாளியாக மாறுகிறானோ, அப்படியே குரு பக்தியானது வளர்ந்து நாள் அடைவில் கடவுள் பக்தியாகவும், அன்பாகவும் பரிணமிக் கிறது.

காயத்ரி மந்திரத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது வசிஷ்ட விஸ்வாமித்ர சாபத்தைப் பற்றிக் கூறுவார்கள். எவனொருவன் இந்தச் சாபத்தை முறியடிக்கிறானோ அவனுடைய சாதனை பயனுடையதாகும்.

இந்த வருணனையில் காயத்ரி சாதனை நன்கு அனுபவம் பெற்ற, தகுந்த வழிகாட்டிகளின் பாதுகாப்பில்தான் செய்ய வேண்டுமென்ற ரகசியம் மறைந்திருக்கிறது.

வசிஷ்டர் என்பதற்கு மிகவும் சிரேஷ்டமான (உயர்ந்த) என்று பொருள். முன்காலத்தில் ஒன்றேகால் கோடி காயத்ரி ஜபித்தால் அவருக்க வசிஷ்டர் பதவி தரப்படும். வசிஷ்ட சாபத்தை அகற்றுதல் என்பதற்குப் பொருள் முதிர்ந்த அனுபவம் பெற்ற வரிடம் காயத்ரி தீக்ஷை பெறுவதாகும். விஸ்வாமித்திரர் என்பதற்குப் பொருள், எல்லோருக்கும் நன்மை செய்ய விரும்புபவன், கருமத்தில் கண்ணாயிருப்பவன், நல்லொழுக்க முடையவன் என்பதாகும். காயத்ரியை உபதேசிப்பவன் வசிஷ்டருடைய குணங்களைப் பெற்றிருந்தால் மட்டும் போதாது. அவன் விஸ்வாமித்திரனாகவும் இருக்க வேண்டும். இதைப் போன்ற தகுதிகள் பெற்ற நபரிடமிருந்து விதிமுறைப் படி தீக்ஷை பெற்றால் இந்த மகா மந்திரத்தினாலேயே ஏற்ற பலனைப் பெற முடியும். தனக்குத்தானே மனம் போனபடி

ஏதோ செய்துகொண்டிருந்தால் பெரும் பயனைப் பெற முடியாது. யார் ஒருவனுக்குத் தகுந்த வழிகாட்டி கிடைக்கிறானோ அவன் சாதனையில் பாதி பலனைப் பெற்றுவிட்டதாகக் கருதலாம். இதுதான் சாப விமோசனத்தின் ரகசியமாகும். காயத்ரீயைப் போன்ற உலக சக்திக்கு யாரால் சாபம் தர இயலும்? யாருக்கு அந்தத் திறமையுண்டு?

குரு தீக்ஷையுடன் ஆரம்பிக்கப்பட்ட காயத்ரி சாதனை சிறந்த பலனை அளிக்கவல்லதாக இருக்கும். இந்தக் கருத்தில் காயத்ரியில் சித்தி பெற்ற சாதகர் பண்டித். ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா அவர்கள் காயத்ரி மகா மந்திரத்தின் குரு தீக்ஷக்கு உரைகல்லில் உறைத்துப் பார்த்தாலும் சிறந்தவராக இருக்கிறார். அவருடைய வாழ்க்கை காயத்ரி உபாசனையிலும் கடினமான தவத்திலும் மூழ்கியிருந்தது. அவருடைய சிந்தனைகளும், சீரிய செயல்களும் உலக நன்மைக்கான பாவனைகளால் நிறைந்திருந்தன.

மறைந்துவிடும் நிலையில் இருந்த காயத்ரி மகா வித்தையை மறுமலர்ச்சி அடையச் செய்த காயத்ரி மாதாவின் அருள் பெற்ற தவச் செல்வரை இந்த யுகத்தின் விஸ்வாமித்திரர் என்று கூறுவதில் தவறொன்றுமில்லை. அவர் நம்மிடையே ஸ்தூல உடலில் இல்லாவிட்டாலும் சூட்சும அல்லது காரண சரீரத்தில் மிகுந்த வலுவுடன் செயல்பட்டு வருகிறார். பக்தி மிகுந்த சீடர்கள், பக்தர்கள், ஆர்வமுடையவர்கள் அவ்வப்பொழுது அவருடைய பாதுகாப்பு, அனுக்கிரகம், வழிகாட்டுதல் முதலியவற்றில் அனுபவம் பெறுகிறார்கள். அவருடைய திறமை வாய்ந்த பிரதிநிதிகள் மூலம் காயத்ரி தீக்ஷை தொடர்ந்து வருகிறது. அவர்களிடமிருந்து காயத்ரி மகா சக்தியின் விதிமுறைப்படி உபாசனையும், சாதனையும் ஆரம்பிக்கலாம்.

## உபாசனையுடன் சாதனையும் அவசியம்

காயத்ரி உபாசனையில் ஜபம், தியானம் முதலிய செயல்கள் சில மணிநேரந்தான் நடைபெறும். இதனால் மட்டும் காயத்ரி சாதனை முடிவடைவதில்லை. இதற்கு உபாசனையுடன் சாதனையையும் கட்டாயமாக இணைக்க வேண்டி இருக்கிறது. உணவும் தண்ணீரும், இரவும் பகலும், வெப்பமும் குளிரும். ஆணும் பெண்ணும் என்ற இணைகள் இருப்பதுபோல் உபாசனையும் சாதனையும் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை. சாதனையில்லாமல் உபாசனை முடிவுற்றதாக இருக்கும்.

பூஜை உபாசனையுடன் சாதனைக் கிரமத்தை 24 மணி நேரம் செய்யவேண்டும். நம் சிந்தனையிலும், செயலிலும் எந்தத் தவறும் நிகழாதபடி ஒரு காவலாளியைப் போல் கண்காணிக்க வேண்டும். எதிரியின் எல்லைக்கோட்டில் நிற்கும் படைவீரர்கள் எப்படி ஒவ்வொரு நொடியிலும் எதிரிகளின் நடமாட்டங்களையும், பேச்சுக்களையும் தெரிந்து கொள்ளவும், போரிடவும் தயாராக இருப்பார்களோ அதைப் போலவே வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் எந்த எதிர்ப்பையும் சாமாளிக்கத் தயார்நிலையில் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய அவசியம் உள்ளது. இந்த வேட்கைதான் சாதனை என்பது. இதில் என் சிந்தனை, பழகும் விதம், சுபாவம் ஆகியவை மேலும் சிறந்ததாகவும், நற்குணங்கள் பொருந்தியதாகவும் இருக்கத் தொடர்ந்து முயற்சி செய்ய வேண்டும். ஜபம், தியானம், உபாசனைதான் எல்லாம் என்று நினைத்து வாழ்க்கையின் முன்னேற்றத்தைப் பற்றிக் கவனிக்காமல் இருந்தால் காயத்ரீ சாதனையின் பலன்களை முழுவதுமாகப் பெற முடியாது.

சாதனை காலையில் எழுந்தவுடனேயே ஆரம்பமாகிறது. படுக்கையில் இருந்தபடியே தன் உண்மையான ரூபம், வாழ்க்

கையின் குறிக்கோள் முதலியவற்றைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இன்றைய நாட்பொழுதைப் பயனுடையதாகவும், அர்த்தமுள்ளதாகவும் செய்வேன் என்று சங்கல்பத்துடன் எழுந் திருக்க வேண்டும். இத்துடன் நாள் முழுவதும் செய்ய வேண்டிய செயல்கள், சிந்தித்துச் செயல்பட வேண்டிய வழி முறைகள் குறித்தும் ஒரு அட்டவணை தயாரித்துக் கொள்ள வேண்டும். இதில் பொறிகளின் கட்டுப்பாடு, நேரக் கட்டுப் பாடு, எண்ணக் கட்டுப்பாடு, பணக் கட்டுப்பாடு, ஆகிய பழக்கத்திலிருக்கும் நான்கு விஷயங்களையும் எச்சரிக்கை யுடன் நடைமுறைப்படுத்த வேண்டும்.

பொறிகள் அல்லது இந்திரியக் கட்டுப்பாடு என்பது நாக்கின் மேலும், ஜனனேந்திரியங்களின் மேலும் கட்டுப் பாட்டுடன் இருத்தல். நாவின் ருசி பார்க்கும் தன்மையால் அதிகமாகச் சாப்பிடத் தோன்றுகிறது. அதனால் வயிற்றுக் கோளாறு ஏற்பட்டு உடலில் நோய் உண்டாகிறது. ஜனனேந்திரி யங்களின் விருப்பங்களுக்கு இணங்கி மனிதன் தன் சக்தியை மத்தாப்புக் கொளுத்துவது போல கொளுத்திவிடத் தயாராகிறான். இந்த நிலை அதிகரித்தால் எலுமிச்சம் பழத்தைப் பிழிவதுபோல உடலையும் மனதையும் பிழிந்தெடுத்துவிடும். உடல் விரைவில் முதுமையை அடைகிறது. மனம் பல்வேறு விதமான தீய எண்ணங்களால் சூழப்படுகிறது. நாக்கின் தவறான உபயோகத்தால் தேவையற்ற சண்டைகள், கசப்பு உணர்வுகள் உண்டாகின்றன. இது தன்னவர்களை வேற்று மனிதர்களாகவும், தோழர்களை எதிரிகளாகவும் மாற்றி விடுகிறது. பொறிகளின் கட்டுப்பாட்டுக்குள் நாக்கின் தீங்கான செயல், வாக்கு, பிறப்பு உறுப்புகளின் தவறான உபயோகத்தின் மேல் தீவிர கண்காணிப்பு வேண்டும்.

காலக்கட்டுப்பாட்டின் கீழ் அன்றாடச் செயல்களைக் குறித்து ஒரு பட்டியலைத் தயாரித்துக் காள்ள வேண்டும். அதில்

சோம்பல், தவறு மற்றும் தீங்கு நிறைந்த செயல்களைத் தவிர்க்க வேண்டும். காலந்தான் வாழ்க்கை. காலத்தைச் சரியாகப் பயன் படுத்தினால் விரும்பிய பொருளை அடையலாம். ஆதலால் சமச்சீராகவும், நன்முறையிலும் அன்றாடச் செயல் ஒரு நொடியும் வீணாகாமல் சிறந்த முறையில் உபயோகப்படும்படி அட்டவணை தயாரிக்க வேண்டும். உற்சாக மிகுதியில் செய்ய இயலாத காரியங்களை ஏற்றுக் கொண்டு துன்பப்படும்படியான நிலைக்கு வந்துவிடாமல் எச்சரிக்கையுடன் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பணக்கட்டுப்பாட்டில் சாதாரண இயந்திர வாழ்க்கைத் தரத்தையும், எளிய வாழ்க்கையையும், உயர்ந்த எண்ணங் களையும் மனத்தில் கொண்டு செயல்படவேண்டும். தேவை யற்ற சேமிப்பு, விரும்பத்தகாத செலவுகள் செய்யாமல் இருந்தால் தான் மேலே குறிப்பிட்டவாறு நடந்து கொள்ள முடியும்.

எண்ணங்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைப்பதால் பொருளற்ற, தாழந்த, தீங்கான கற்பனைகளைத் தடுத்துப் பயனுள்ள சிறந்த திட்டங்களையும், எண்ணங்களையும் நினைக்க வேண்டும். அவ்வப்பொழுது மிகத் தாழ்ந்த, குறுகிய, தன்னலம் நிறைந்த எண்ணங்கள் தோன்றும். இவற்றை அகற்ற முன்கூட்டியே திட்டமிட்டு அவற்றை எதிர்க்க உயர்ந்த எண்ணங்கள் என்னும் ஆயுதங்களுடன் கூடிய படையைத் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும். சிறந்த இலக்கியங் களைப் படிப்பது இதற்கு மிகவும் பயனுள்ளதாகவும், உதவி புரிவதாகவும் இருக்கும். இதை வாழ்க்கைக் கிரமத்தில் இணை பிரியாத அங்கமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். நம்மைச் சுற்றியிருக்கும் சூழ்நிலையில் பரவியுள்ள தீய எண்ணங்களின் நிழல் நம் மனதில் எளிதில் படியும். சிறந்த நூல்கள் இதைத்

தவிர்ப்பதில் பயன்தரும். இவற்றால் நாம் மகான்களின் கருத்துக் களை உணரமுடியும். அவர்களின் தோழமை நம்முடன் இருப்ப தைப் போன்ற லாபத்தை உணர முடியும். அவர்கள் காட்டும் ஒளியில் மனதில் மூலையில் ஒளிந்திருக்கும் தீயகுணங்கள் கண்டுகொள்ளப்பட்டு அவற்றை நீக்குவதற்கான திட்டங்களும் நம் மனதில் உறுதிபெற்றெழும். வாழ்க்கையின் குறிக்கோள் தெளிவாகக் காணப்படும். நம் முன்னேற்றத்திற்குத் தேவையான ஊக்கமும், பாதையும் சுலபமாகக் கிடைக்கும்.

இரவில் தூங்கும் முன் நாள் முழுதும் நடந்த செயல் களைப் பற்றிய மறு சிந்தனை, காலையில் நிச்சயித்த அட்டவணையில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிச் சிந்திக்க வேண்டும். அடுத்தநாள் இன்னும் சிறப்பானதாக அமைய என்ன செய்யலாம் என்று எண்ணிப் பார்க்க வேண்டும். இதில் ஆத்மசிந்தனை, ஆத்மாவை நல்வழிப்படுத்துதல், ஆத்மா வைக் கட்டுக்குள் வைத்தல் மற்றும் ஆத்மாவின் மறுமலர்ச்சி ஆகியவை சேர்த்துக் கொள்ளப்படுகின்றன.

ஆத்ம சிந்தனையில் நாள் முழுவதும் நடந்தவற்றைப் பற்றிச் சிந்தித்தலும், ஆராயதலும் வேண்டும். இதில் ஏற்பட்ட குறைகளையும், குற்றங்களையும் தேடிக் கண்டறிய முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

ஆத்மாவை நல்வழிப்படுத்துதலில், வழக்கத்தில் வந்துள்ள குற்றம், குறைகளிலிருந்து விடுதலை பெறத் திட்டம் தீட்டப்படும்.

ஆத்மாவைக் கட்டுக்கோப்பில் வைத்துக் கொள்வதற்கு மேலே நிர்ணயிக்கப்பட்ட திட்டங்களைக் கையாளும் வழி களைப் பற்றிச் சிந்திக்கவேண்டும். இக்குணங்கள் இதுவரை இல்லாதபோதிலும், வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் இவை தேவைப்படுகின்றன.

ஆத்மாவின் மலர்ச்சி என்பது தன்னைக் கடவுளின் அம்சமாக எண்ணிக் கொண்டு, முழு உலகையும் தன் குடும்பமாக எண்ணும் உயர்ந்த எண்ணத்தைச் செயலாக்க வழக்கப் படுத்திக் கொள்வது இதனுடைய துவக்க நிலையாகும். நல்ல எண்ணம், சகிப்புத் தன்மை, தாராள குணம், தொண்டு போன்ற நற்குணங்களைக் குடும்பத்தில் ஆரம்பித்துக் கிரமமாக சமூகம், நாடு, உலகம் முழுவதும் பரப்ப முயலவேண்டும்.

காலையில் எழுந்தது முதல் இரவு தூங்கும் வரை மேலே குறிப்பிட்ட நியமங்களைக் கடைப்பிடித்தால் வழக்கமான தவ சாதனை முடிவு பெறும். உபாசனை, சாதனைகளின் இந்தக் கிரமங்களை முன்னெச்சரிக்கையுடனும், நேர்மையுடனும் அனுசரிக்க வேண்டும். இரவு தூங்குமுன் குருவையும், இஷ்ட தெய்வத்தையும் தியானித்து நித்திரையென்னும் தாயின் மடியில் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும்.

யுக சக்தியான காயத்ரியுடன் இணைந்து வாழ்க்கையில் வெற்றி கொள்ளுங்கள்.

ஒவ்வொரு யுகத்திலும் மனிதர்களைக் கஷ்டத்திலிருந்து காக்க, காயத்ரி மகாசக்தி வெவ்வேறு ரூபங்களில் அவதரிக்கிறாள். துர்காசக்தி, மகாகாளி, சீதை முதலிய தேவிகள் காயத்ரியின் வெவ்வேறு ரூபங்கள், புத்தரின் பிக்ஷுக்கள், ஏசுநாதரின் பிரசாரகர்கள், சானக்கியரின் தர்மா சாரியர்கள், காந்திஜியின் சத்தியாகிரகிகள் முதலியோர் இந்த மகா சக்தியின் உபகரணங்களாவர்.

அழிவை நோக்கிச் செல்லும் இன்றைய கஷ்டமான நிலையில், மனிதனின் எண்ணங்களைச் சரியான பாதையில் திருப்பிச் செலுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. காயத்ரி சாதனை இந்த வேலையைப் பூர்த்தி செய்யும் சிறந்த கருவியாகும். காயத்ரியின் 24 எழுத்துக்களில் எல்லாத்

தத்துவங் களும் அடங்கியிருக்கின்றன. உபாசகனின் இதயத்தின் ஆழத்தில் வாழ்க்கையை ஆரோக்கியமாகவும், அறிவுடைய தாகவும், புத்திகூர்மை உள்ளதாகவும் செய்யும் ஒளியை ஊக்கு விக்கிறது. பலவிதமான மெய்ஞ்ஞானப் பிரிவுகள் இருந்த போதிலும், ஆதிகாலத்து ரிஷிகள், அறிவாளர்கள், மகான்கள் எல்லாரும் உபாசனையைப் பற்றி ஒருமித்த கருத்து கொண்டவர்கள்தான். எல்லா அவதாரங்களிலும் உபாசனைக்கு, ஆதிசக்தியான காயத்ரியைத்தான் இஷ்ட தெய்வமாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

மனித வர்க்கத்தின் இன்றைய பிரச்சினைகளுக்கு நல்லறிவும், விவேகமும் தான் விடைகொடுக்க முடியும். மனத்தையும், புத்தியையும் அரக்கத்தனம் கவர்ந்துள்ள இந்த யுகத்தில் இதன் அவசியம் முன்பைவிட மிக அதிகரித்திருக்கிறது. இந்த யுகத்தின் முதல் தேவை நற்புத்தியை ஊக்குவிக்கும் காயத்ரி மந்திரமாகும். அதனுடைய சக்தி உயிர்களுக்கெல்லாம் நன்மை உண்டு பண்ணுவதாகும். இது இகத்திற்கும் பரத்திற்கும் நன்மை செய்வதாகும். இதைப் போன்ற தவமோ, சாதனையோ வேறு ஒன்றுமில்லை. இது மந்திர மாயஜாலமல்ல. இது ஒலி சக்தியும், பாவனாசக்தியின் கண்கண்ட விஞ்ஞானமுமாகும். சிரத்தையுள்ளவர்கள், இல்லாதவர்கள், தர்க்கம் செய்பவர்கள், தர்க்கம் செய்யாதவர்கள் யாரானாலும் இந்த மந்திரத்தை ஜபித்துத் தன்னைத் தீங்கான பாதையிலிருந்து திருத்திக் கொள்ளலாம். ஒழுங்கான பாதையில் செல்பவர்கள் தம் வாழ்க்கையை மேலும் மேம்படுத்திக் கொண்டு வெற்றியை நோக்கி நடை போடலாம்.

**இந்த யுகத்தில் துன்பங்களுக்கு மூலகாரணமான தீங்கான நோக்கங்களைத் திருத்துவதற்காக மறுபடியும் காயத்ரி யுக சக்தியாக உருவெடுத்துள்ளது. பண்பாட்டின் மற்ற பிரிவுகளைப்**

போல் இந்த காயத்ரி வித்தையும் அறியாமை என்னும் இருட்டில் மறைந்துவிட்டது. ஒன்று அதனுடைய விவரமோ அல்லது அதனை வெளிப்படுத்தும் முறைகளோ கிடைக்கப் பெறவில்லை. மற்றொன்று கிடைப்பவைகளும் மிகவும் சிக்க லாக இருப்பதால் பொதுமக்களால் புரிந்து கொள்ள முடிய வில்லை. யாருக்கேனும் சரியான முறையில் தெரிந்தாலும், தன்னலம் படைத்தவர்கள் இந்த மகா வித்தையை மற்றவர்கள் சாதனை செய்ய முடியாதபடி தம்மிடமே அடக்கி வைத்துக் கொண்டார்கள்.

காயத்ரி பிராமணர்களுக்கு மட்டுந்தான்; பெண்கள் காயத்ரியை ஜபிக்கக் கூடாது; இது காதில் உபதேசிக்கப்பட வேண்டிய மந்திரமாகும்; காயத்ரிக்குச் சாபம் உள்ளது என்று பலவாறாகக் கூறி, உபயோகமான இந்த மணியைத் துருப்பிடிக்கச் செய்து விட்டார்கள்.

யுகநிர்மாணத் திட்டங்களைச் செயல்படுத்தவே வந்த பண்டித். ஸ்ரீராம சர்மா ஆசார்யா அவர்கள் தம் ஈடு இணையற்றத் தவச் சாதனையால் இந்த மணிக்கு உருவம் கொடுத்தார். அவர் தம் பகீரத முயற்சியால் காயத்ரி என்னும் ஞான கங்கையை மனிதகுலம் முழுவதற்கும் நன்மை பெருக பூவுலகில் அவதரிக்கச் செய்திருக்கிறார். காயத்ரி உபாசனையை மிகவும் சுலபமாக, தெளிவாகப் புரியும்படிச் செய்திருப்பதால் படித்த-படிக்காத, ஆஸ்திகர்-நாஸ்திகர், ஆடவர்-பெண்டிர், உடல் நலமுள்ளவர்-உடல்நலமற்றவர் என்று எல்லோருக்கும் சிரத்தை ஏற்படும்படிச் செய்திருக்கிறார். இவ்வாறு மக்கள் மத்தியில் காயத்ரி மகாவித்யை யுக சக்தியாக வெளிப் பட்டுள்ளது. இதன் தோற்றம் தேவகலாச்சாரத்திற்கும், மனித குலம் முழுமைக்கும் சௌபாக்கியம் என்னும் சூரியன் உதித்தது போலாகும்.

இதைத் தமதாக்கிக் கொண்டு இதுவரை லட்சக் கணக்கான மக்கள் ஒளிமயமான எதிர்காலத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள். காயத்ரி பரிவார் என்பது காயத்ரி சாதகர்களின் மிக விரிந்த சமூகமாகும். இதன் தலைமையிடம் ஹரித்வாரில், ஸப்தரிஷி க்ஷேத்திரத்தில், புனிதகங்கையின் கரையில் இமாலயத்தின் நுழைவாயில் சாந்திகுஞ்சில் அமைந்திருக்கிறது. பழங்காலத்தில் இந்தப் புனித மண்ணில் விஸ்வாமித்திர மஹரிஷி தவம் செய்தார். இந்த யுகத்தில் ஆசார்யா ஸ்ரீராம் சர்மா மற்றும், வணக்கத்திற் குரிய மாதாஜி அவர்களின் கடினமான தவச்சாதனைகளால் சாந்திகுஞ்ச் விழித்தெழுந்து, உயிர்பெற்று இந்த யுகத்தின் புனித பூமியாக, காயத்ரி சித்த பீடமாக உருவெடுத்து வெளி வந்துள்ளது. காயத்ரியின் உயிர்ச்சக்தியினால் நிரம்பி வழியும் இந்தப் புனித பூமியில் சாதனை செய்யும் சாதகன் வேண்டிய தெல்லாம் பெறுவதுடன் ஒரு புது நம்பிக்கை, சக்தி, ஒளி பெற்றுத் திரும்புகிறான். ஒன்பது நாள் காயத்ரி சாதனை இங்கு, தொடர்ந்து நடைபெறுகிறது. இதில் பங்கு கொண்டு யாராகிலும் காயத்ரி மஹாசக்தியின் தத்துவத்தை மனதில் பதியவைத்துக் கொண்டு, இந்த யுகத்தின் சக்தியுடன் இணைந்து தன் வாழ்க்கையைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள முடியும்.

## EVOLUTION OF A DIVINE MISSION

### Chronological Compendium

The divine soul of Pt. Shriram Sharma Acharya descended on September 20, 1911 as the son of Pt. Roopkishor Sharma and Mata Dankunvari Devi in Anvalkheda (Dist. Agra). That his saintly heart breathed for the welfare of all living beings was clearly expressed, since his childhood, by his altruist service of the poor, weaker and down trodden ones around him. Mahamana Madan Mohan Malviya bestowed the initiation of *Gāyatrī Mantra* on him when he was 9 years old. January 18, 1926, on the auspicious day of Vasant Panchami, the sacred flame of the *dīpaka* (lamp) flashed the subtle body of his Guru – a great *yogi* of the *rishi* age – during his *Gāyatrī Sādhanā*. This had sparked the unfolding of the divine origin and purpose of his life and enlightened it with the grace and guidance of his Guru. [This *akhand dīpaka* is kindled since then and is enshrined at Shantikunj, Hardwar.]

The next 24 years of his life were devoted to ascetic endeavors of 24 *Mahāpuraścaraṇas* — each of 24 lacs *Gāyatrī Mantra Japa* (the highest kind of spiritual *sādhanās* of *Gāyatrī*). He had also sincerely participated in the freedom movement of India[1] under the noble guidance of Mahatma Gandhi during this period while continuing with his altruist services to the society and attending to the familial duties too.

The unique experiment of *Vicāra Krāntī* — gradual refinement of thoughts, righteous transformation of attitude and sublime transmutation of human psychology up to the high realms of spirituality — was initiated by Acharya Sharma from the day he wrote the first issue of *Akhand Jyoti* in 1937. The subscriptions of this magazine (in Hindi and translations in English and tens of regional languages) have expanded exponentially since then....

His wife, Smt. Bhagavati Devi Sharma was also born in 1926 – the year, when the afflatus of his Guru was realized and the year, which is described by Sri Aurobindo as that of the renaissance of divine force on this earth. Ever since their marriage in 1943, this *rishi* couple dedicatedly pursued the noble mission for arousal of human glory and revival of divine culture.

Pt. Sriram Sharma had established the Gayatri Tapobhumi at Vrindavan Road, Mathura and performed the *purṇāhuti* of his *mahāpuraścaraṇas* there in 1953. He had organized a grand *Gāyatrī Yagya* in 1958. This *Gāyatrī Yagya* was a unique experiment towards renascence of spirituality in human life. This also initiated propagation of the knowledge of *Gāyatrī Mantra* and *Yagya* in scientific light and laid the foundation of *Yug Nirman Yojna* — architecturing of a bright era of moral, cultural, intellectual and spiritual evolution. In another couple of years he had translated the entire Vedika Literature in Hindi and presented the first ever, comprehensive volume on the science and philosophy of *Gāyatrī Mantra* and *Gāyatrī Sādhanās*. Savants like Dr. S. Radhakrishanan and Acharya Vinoba Bhave had honored his contributions as historical and recognized him as *Vedaniṣṭha.*

The saintly lives of Acharya Sharma and his wife, the spiritual charge of their personalities and the inner power of their sacred love for all beings, had attracted all the readers of *Akhand Jyoti,* and all those, who had attended this *yagya*, to work for the noble cause of his great mission. This is how the "larger family" kind of organization — called **"Gayatri Pariwar"**, came into existence. This has now expanded across the globe beyond the barriers of religion, creed, caste, sex, socioeconomic status or educational background.

Acharya Sharma — the *rishi* of this age, had projected the **Yug Nirman Yojna** in 1962 as determined plans of his divine mission of ushering into a bright era. The period of 1971-1990 has witnessed remarkable accomplishments of his life on multiple facets. He had climbed the arduous and mystic heights of the Himalayas several times and stayed there for specific *sādhnās* as per the guidance of his Guru. He pioneered the resurrection of the *rishi* culture by simultaneous renaissance and expansion of the reformative and constructive endeavors of all the *rishis* of the *vedik* age.

He instituted the mission's fraternity at Shantikunj, Hardwar as an academy for moral and spiritual awakening and training and its research wing Brahm Varchas as a center for creative integration of the modern science with spirituality, in 1971 and 1979 respectively. Regular short-term and long-term interactive training programs for — personality

development, spiritual refinement through *Gāyatrī Sādhanā* and perfection in the art of living, commenced at Shantikunj in the early eighties. The 2400 Shaktipithas spread across the country also became functional as distributed centers for social reforms and training of *Pragya Yoga* under the banner of the mission with this advancement.

Around the same time, Gurudev Shriram Sharma wrote the *Pragya Purana* as the 19th in the series of the eighteen Puranas of the Vedika Age. This was another remarkable addition to his monumental contribution of over 3000 books and volumes on the gamut of topics concerning human life. Mass education from religious platform and efforts for uplifting the status of women in India gave revolutionary boost to the reformative and constructive programs of the Yug Nirman Yojna in this period.

During 1984-1986, he endeavored the unique spiritual experiment of *sukśmīkaraṇ* —subtlization and sublimation of vital force and physical, mental and spiritual powers. He authored a special set of 24 books (*Krāntidharmī Sāhitya*) highlighting the future of the world and conveying the message of time to prepare us for the realities stored in the distant depths of the 21st Century..... On the 2nd June, 1990, he left the physical sheath of his being and magnified his sublime powers up to the higher realms of divinity in order to enlighten the subtle world of people's thoughts and sentiments......

There after, Mata Bhagavati Devi had guided the series of *Ashwamedha Yagyas*, which accelerated the global expansion of the mission with great impact, in the critical juncture of the decade of change of a millennium and change of an era. She too joined Acharya Sharma in the subliminal domains of divinity after leaving the physical body on the 19th September 1994.

The light of righteous knowledge and human glory kindled by them continues to illuminate the excelling path of their great mission and promises the descent of "The Age of Truth" in the years to come.....

* * * * *

**Ph: (0133) 460309, 461485, 460602 Fax : 460866,**
**Email : shail@del2.vsnl.net.in Website : www.gayatripariwar.org**

